# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



**மேஷ லக்னத்தில் பிறந்தவர்களா நீங்கள்?**

உங்களின் குணம் இதுதான்!மேஷம்:

**தகடோடு** எகரேல் என்ற பழமொழிக்கு உட்பட்டது இந்த ராசி. இயற்கையிலே யாருக்கும் கட்டுப்படாத சுதந்திர தன்மையும், வைராக்கியமும் மிக்கது. எதையும் தைரியத்தோடும் நம்பிக்கையுடனும் செய்து முடிப்பர். வெற்றி பெறுவது ஒன்றையே லட்சியமாக கொண்டிருப்பவர்கள். அவசரக்காரர்கள் என்று உலகத்தால் சொல்வார்கள். அது நூற்றுக்கு நூறு உண்மை. எப்படித்தான் தாயின் வயிற்றில் இருந்தீர்கள் என்று சொல்லித்திரிவார்கள். இவர்கள் நினைத்த காரியத்தை நினைத்த நேரத்தில் செய்யாவிட்டால் தூக்கம் வராது, மூக்கிற்கு மேல் கோபம் தான் வரும். தந்திரசாலிகள் மட்டுமல்ல, தைரியசாலிகளும் கூட இவர்கள்.

- ★ கால புருஷனின் முதல் ராசி மேஷ ராசி
- ★ நெருப்பு ராசி சர ராசி ஒற்றை படை ராசி ஆண் ராசி
- ★ உருவம் ஆடு
- ★ சிகப்பு நிறம்
- ★ அங்கம் தலை
- ★ இரவில் வலிமை
- ★ ராசியின் அதிபதி செவ்வாய்
- ★ ராசியில் உச்சமான கோள் சூரியன்
- ★ நீச்ச கோள் சனி
- ★ நட்பு கோள்கள் குரு சூரியன் சந்திரன்
- ★ பகைக் கோள்கள் ராகு கேது
- ★ சம கோள்கள் சுக்கிரன் புதன் சந்திரன்   மேஷம்  30 பாகை வரை

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



- **செவ்வாயின் மூலத்திரிகோண வீடு**
- 12 பாகை வரை மூலத்திரிகோணம் மீதி 18 ஆட்சி வீடு
- ராசிக்குரிய நட்சத்திரங்கள்
- அஸ்வினி 4பாதம் பரணி 4பாதம் **கிருத்திகை** 1பாதம் ராசி இலக்ன நாழிகை 4 1/4 ராசி மானம் 255 வினாடிகள்
- தேசம் பாடலம்
- இருப்பிடம் **வெளியிடம்**

★ ஸ்தானம் காடு

★ திசை கிழக்கு

★ சிகப்பு நிறம்

★ பஞ்சபூதம் நெருப்பு

★ குணம் குருரன்

★ மலர் செண்பகம்

★ இரத்தினம் பவளம்

★ சமித்து கருங்காலி

★ தேவதை கார்த்திகேயன்

★ பிரத்யதி தேவதை பிருத்வீ(பூமி)ஷேத்திரபாலன்

★ வாகனம் அன்னம்

★ தானியம் துவரை

★ உலோகம் செம்பு

★ பிணி பித்தம்

★ சுவை துவர்ப்பு

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



★ உச்சவீடு மகரம்

★ நீச்சவீடு கடகம்

★ தசை ஆண்டுஏழு வருடம்

★ ஒரு ராசியில் ஒன்றரை மாதம்

★ அஸ்தமனம் 17 °

★ ஷத்திரியஜாதி

★ உபகிரகம் தூமன் சுரேசன்

★ ஷேத்திரம் வைத்தீஸ்வரன் கோவில்

★ செவ்வாயின் வேறு பெயர்கள்

★ அங்காரகன் அழல் ஆரல் உதிரன்

பாவக காரகத்துவம்

தலை உணர்ச்சி நோய் எதிர்ப்புச் சக்தி உடலின் தன்மை உடலின் தோற்றம்

பகை வெல்லும் திறன் ஆன்மபலம் வாழ்க்கைத்தரம் பழகும் தன்ம மன இயல்பு ஆடை ஆபரணம் மனக்கவலை மகிழ்ச்சி துக்கம் கனவு குணநலன் இயல்பு செல்வாக்கு நிலை ஆயுள்பலம் இவற்றைபற்றி அறியலாம்

கிரக காரகத்துவம்

சகோதர சகோதரிகள் தந்தைவழி உறவுகள் அரசர்கள் சேவகர்கள் ரசாயன உரங்கள் சாஸ்திரிகள் வீரர்கள் காட்டுவாசிகள் திருடர்கள் கெட்டவர்கள் எதிரிகள் தளபதி அதிகாரிகள் சிகப்பு நிறம் கசப்பு சுவை செம்பு உலோகம் தீ பொன் செம்பு உலோகம் ஒன்பதாம் எண் செவ்வாய்க்கிழமை தென்திசை சூடான பொருள் மருந்துகள் தீபட்டதுணிகள் சாராயம் வெல்லம் ஆயுதங்கள் பூமி வீடு அசையா சொத்துக்கள் துவரை போர் கலகம் தைரியம் வன்முறை உற்சாகம் சமயம் திடீர் மரணம் ரணநோய்

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



ரண சிகிச்சை ஆகியவற்றிற்கு இவரே காரகன் ஆகிறார்

உறவுகள்

பெண் ஜாதகத்தில் செவ்வாய் கணவராகவும் இரு ஜாதகருக்கும் சகோதரசகோதரி உறவுகளை குறிக்கும் மைத்துனர் ரத்த சம்பந்த உறவுகளை குறிக்கும்

உறுப்புகள்

எலும்பு மஜ்ஜை எலும்பு ரத்தம் பற்கள் நகம் இமைகள் வீரியம் மண்ணீரல்

தொழில்கள்

போலீஸ் ராணுவம் மேலாளர் சூப்பர்வைசர் சமையல் சீருடை அணிந்த பணியாளர்கள் தற்காப்பு கலைகள் உடற்பயிற்சிக் கூடங்கள் போர்வீரர் ரசாயனம்சாஸ்திரம் தொழில் மருந்து வியாபரம் கெமிக்கல் உரம் நாவிதர் தொழில் பல்வைத்தியம் உலோகம் நெருப்பு கூரான ஆயுதம் இன்ஜினியர் எந்திர சம்பந்தம் பூமி சம்பந்தப்பட்ட தொழில் விவசாயம் கசாப்பு வியாபாரம் கடிகார வேலை சாயவேலை தோல் பதனிடல் வீரம்தீரம் மிகுந்த சாகசச் செயல்கள் செங்கல் சூளை மிளகாய் வத்தல் கமிஷன் வியாபாரம் கத்தி ரத்தம் ஆயுதம் ஆபரேஷன் ஆகியவற்றிற்கு செவ்வாய் அதிபதி

மேஷ ராசியில் பிறந்தவர்கள் தரும குணம் மிக்கவர்கள் பிடிவாத குணம் முன்கோபம் உண்டு அதிகாரம் மிக்க தொழில் வேலை வாய்ப்பு அமையும்

நிலபுலங்களால் லாபம் உண்டு

எதிர்ப்புகளுக்கு அஞ்ச மாட்டார்கள்முன்யோசனை குறைவு

அஸ்வினி நட்சத்திரத்தில் பிறந்தவர்கள்

இது கேதுவின் நட்சத்திரம் ஆகும்ன அஸ்வினி என்றால் குதிரை என்று பொருள் அஸ்வினி பிறந்தவர்கள் பிடிவாதக்காரர்கள் வேகமாக இயங்கும் ஆற்றல் உடையவர்கள்

வசூலில் உச்சமடையும் கிரகம் சூரியன் இவர்கள் அரசாங்கத்திற்கு மட்டுமே

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



கட்டுப்படுவார்கள் புகழ் விரும்பிகள் எதிர்கால திட்டத்தை வகுப்பதில் வந்தவர்கள் இது மருத்துவ குணமுடைய நட்சத்திரம்

அஸ்வினி 1ம் பாதம் இது செவ்வாயின் அம்சம் குடும்பப் பற்று தன்னம்பிக்கை முரட்டுப் பிடிவாதம் எல்லாவற்றையும் அனுபவித்து வாழ வேண்டும் என்ற எண்ணம் கொண்டவர்கள்

அஸ்வினி 2ஆம் பாதம் சுக்கிரனின் அம்சம் கலையில் ஈடுபாடு பணம் சேர்ப்பதில் ஆர்வம் சிற்றின்ப ஈடுபாடு போன்ற குணங்கள் இருக்கும்

அஸ்வினி மூன்றாம் பாதம்

புதனின் அம்சம் கல்வி ஆன்மீக ஈடுபாடு தெய்வபக்தி சாமார்த்தியம்

தலைமை தாங்குவது போன்ற குணங்கள் இருக்கும

அஸ்வினி நான்காம் பாதம்

இது சந்திரனின் அம்சம்

எளிதில் உணர்ச்சி வசப்படுதல் தார்மீக சிந்தனை திறமை நேர்மை உள்ளவர்கள் போன்ற குணங்கள் இருக்கும்

பரணி நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் தரணியை ஆள்வார்கள் என்ற பழமொழி உண்டு

சுகபோக வாழ்க்கை வாழ்வார்கள் வசீகரமான தோற்றம் சுயநலம் பாசம் நேசம் அன்பு இருக்கும்

பரணி 1ம் பாதம் இது சூரியனின் அம்சம் அழகு சுகபோகத்தில் பிரியம் தனக்கு சாதகமாக்கிக் கொள்ளும் எண்ணம் பொறுமை இல்லாத குணம் ஆகிய குணநலன்கள் இருக்கும்

பரணி இரண்டாம் பாதம் இது புதனின் அம்சம் குடும்ப வாழ்வில் பட்டு ஆடை அணிகலன்கள் மேல் ஆசை ஏற்ப்படுத்தும்.

பரணி மூன்றாம் பாதம் இது சுக்கிரனின் அம்சம் உற்சாகம் மகிழ்ச்சி புத்திக்கூர்மை அபார ஞாபக சக்தி பிறரை நம்பாத எண்ணம் போன்ற குணங்கள் இருக்கும்

பரணி நான்காம் பாதம் இது செவ்வாயின் அம்சம் தலைமை தாங்கும் தன்மை அலங்காரம் ஆடம்பரத்தில் விருப்பம் சுயமாக முடிவெடுக்க முடியாத தயக்கம்

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



**பொறாமை குணம் போன்றவை இயல்புகளாக அமையும்**

**கிருத்திகை நட்சத்திரம் இது முருகப் பெருமானுக்கு உகந்த நட்சத்திரம் இந்த ராசிநாதன் செவ்வாய் சுக்கிரன் நட்சத்திர அதிபதி சூரியன் மகிழ்ச்சியை விரும்புவார்கள் நேசமும் நட்பும் உள்ளவர்கள் சட்டென கோபம் வரும் உடனே மறைந்துவிடும் இது இவர்களின் இயல்பு எதை நினைத்தாலும் சாதிக்கும் எண்ணம் சுதந்திரபோக்கு உள்ளவர்கள் பிடிவாத சுபாவம் ஆணவம் கர்வமுடன் இருப்பார்கள்**

**கிருத்திகை 1ம் பாதம் இது குருவின் அம்சம் செல்வத்தை விரும்புவார்கள் ஞானமுள்ளவர்கள் சுயகௌரவம் மிக்கவர்கள் புகழை விரும்புவார்கள்**

**மேஷ லக்னத்தில் எத்தனையோ கோடி மக்கள் பிறந்திருந்தாலும் அவர்களுக்குள்ளே மனம், செயல், சிந்தனை, பண்பு, கல்வி, நடைமுறை, வளர்ச்சி ஆகிய பல விஷயங்களிலும் சிறு வித்தியாசங்களாவது இருக்கும். ஆனால் பொதுத் தன்மைகளில் சில ஒற்றுமைகள் காணலாம்.**

**மேஷம் முதலிய பன்னிரு ராசிகளில் மேஷமானது முதல் ராசியாகத் தொடங்குகிறது. இந்த ராசியின் வீட்டுக்குச் சொந்தக்காரன் செவ்வாய். இதை உச்சவீடாகக் கொண்டு பலம் பெற்றிருப்பவன் சூரியன்.**

**இருபத்தேழு நட்சத்திரங்களைப் பன்னிரு ராசிகளுக்கும் இரண்டேகால் நட்சத்திரங்களாகப் பிரித்துள்ளார்கள். அசுவினி, பரணி, கிருத்திகையின் முதல் பாதம் வரையில் பிறந்தவர்களுக்கு ராசி மேஷ ராசியாகும். சித்திரை மாத ஆரம்பத்தில் காலையில் பிறந்தவர்களுக்கு மாத லக்கினமான மேஷ லக்னம் அமையும். நேரம் தள்ளிப்போகப் போக லக்னம் மாறும்.**

**மேஷ ராசிக்காரர்களுக்கு விருச்சிக ராசியில் அதாவது விசாகம் 4-ம் பாதம், அனுஷம், கேட்டை இவற்றில் சந்திரன் சஞ்சரிக்கும் காலம் சந்திராஷ்டமம் எனப்படும். இந்த சமயத்தில் எந்த காரியத்தையும் நிதானத்துடன் செய்ய வேண்டும். மாதாமாதம் இதைக் குறித்துவைத்துக் கொண்டு அதற்கேற்பச் செயல்பட்டால் வீணாக வரும் தொல்லைகளைத் தவிர்க்கலாம்.**

**மேஷ லக்னத்தில் பிறந்தவர்களின் பொதுக்குணங்கள்**

**மேஷ லக்னம் என்றாலே செவ்வாய் ஆதிக்கத்தில் பிறந்தவர்கள். இவர்கள் எதிலும், தலைமையேற்று செயல்படுபவர்கள். முதன்மையாக இருந்து,**

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



**வெற்றியடைக்கூடியவர்கள்.**

சுக்கிரன் ஆதிக்கத்தில் வரக்கூடிய காலத்தில் இவர்களுக்கு நல்ல மனவாழ்வு அமையும். வாழ்வின் கடைசி வரை போராடி ஜெயிப்பதற்கான சந்தர்ப்பம் அமையும்.

உங்களுடைய ராசிக்கு எட்டாம் இடத்தில் விருச்சிகத்தில் செவ்வாய் வரும்போது போராடி போராடியே வாழ்வில் வெற்றிபெறும் சூழ்நிலை ஏற்படும். பேச்சாற்றல் சிறப்பாக அமையும், வாழ்க்கையில் கடைசி வரை வெற்றி நோக்கி பயணிப்பர் மேஷ லக்னக்காரர்கள்.

தாய்பாசம் அதிகம் கொண்டவர்கள். மேஷ லக்னத்தில் பிறந்தவர்களுக்கு செவ்வாயும், சூரியனும் தீக்கோள்கள். ஆகையால் இந்த ராசிக்காரர்களுக்கு கொஞ்சம் முன்கோபமும் படபடப்பும் அதிகம் இருக்கும். ருசித்துச் சாப்பிடக்கூடியவர்கள்.

வெளியில் அலைந்து திரியும் சுபாவமும் நிலையில்லாத சித்தம் கொண்டவர்களாகவும் இருப்பார்கள். செவ்வாய்க்கோள் போர், ஆயுதங்கள் முதலியவற்றுக்கு அதிபதி. ஆகையால் மேஷ ராசிக்காரர்களுக்கு உடம்பில் காயங்களின் வடுக்களாவது அதிகம் இருக்கும்.

மேலும், இவர்கள் சுருண்ட அழகிய கேசம் பெற்றிருப்பார்கள். சிறந்த ஆடை, சிவந்த மேனி, தர்மம் செய்வதில் விருப்பம் கொண்டவர்களாக இருப்பார்கள். தர்ம சிந்தனையும் ஓரளவு அமைந்திருக்கும். இவர்களுக்கு காரப்பண்டங்கள் அதிகம் பிடிக்கும். இரண்டாவது ஸ்தானமாகிய வாக்கு ஸ்தானத்தையும் அதன் ஆட்சிக் கிரகத்தின் தன்மையையும் அறிந்து ருசியைத் தீர்மானிக்கின்றது. இது பொதுவான குனநலன்களே தவிர, ஜாதகர்கள் அவரவர் தசாபுத்தியை வைத்து நன்மை, தீமைகள் நடைபெறும்.

மேஷ லக்னத்தில் பிறந்தவர்கள், தங்கள் நல்வாழ்வுக்கு இந்த தாயுமானவர் சுவாமி பதிகத்தை மனதார சொல்லலாம்...

அகர உயிர் எழுத்து அனைத்தும் ஆகி, வேறாய்

அமர்ந்தது என அகிலாண்டம் அனைத்தும் ஆகிப்

பகர்வன எல்லாம் ஆகி அல்லது ஆகிப்

பரமாகிச் சொல்லரிய பான்மை ஆகித்

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



துகள் அறுசங்கற்ப விகற்பங்கள் எல்லாம்

தோயாத அறிவுஆகிச் சுத்தம் ஆகி

நிகர் இல் பசுபதியான பொருளை நாடி நெட்டுயிர்த்துப் பேரன்பால் நினைதல் செய்வாம்

மேஷ லக்னம்:

மெலிந்த தேகம் கொண்ட இவருக்கு,தரும/இரக்ககுணம் மற்றும் சாஸ்திரங்களில் நாட்டம் இருக்கும்.,ராஜ வெகுமானம்(அரசு சேவை),.பேச்சுதிறமை,எழுத்துத்திறமை உடையவர்,தைரியசாலி,மூர்க்ககுணம் அதிகம் உடையவர்,உணர்சிகள் மிக அதிகம் கொண்டவர்,நீண்ட கழுத்துடயவர்,அழகும்அறிவும் கொண்ட இவருக்கு மன உறுதி அதிகமாக இருக்கும் எடுத்த காரியத்தை திறமையாக முடிப்பவர்,,அதே நேரத்தில் அதிகமான ஆவேசம் மற்றும் கோபத்தினால் மனோபயமும் இருக்கும்.தீய கிரகங்கள் சம்பந்தப்படும் பொருட்டு சிலர் பொறமை குணத்துடனும்,அதிக பிடிவதத்துடனும் சகோதரர்களுடன் ஒற்றுமையுடன் இருக்கமாட்டார்.பொதுவாக எட்டாமிடதிற்கு செவ்வாய் சம்பந்தம் இருப்பதால் இவர்களுக்கு ஆயுதம்(வெட்டுகுத்து),சுவர் விழுதல்,தலை சம்பந்தமான நோய்கள் இவற்றால் மரணம் ஏற்படலாம்.குருபார்வை பெற்றால் தோஷம் குறையும்.

சுபர்: சூரியன்,குரு

யோகர்: குரு

பாவிகள்: புதன்,சுக்ரன்,சனி

மாரகர்: சனி,புதன்

(அனுபவத்தில் மேஷ லக்னத்துக்கு மரணத்தைதர கடமைபட்டுள்ள இவர்கள் மாரக ஸ்தானமாகிய 2,3,7,8,12 ஆகிய இடத்தில் தீய கிரக சேர்கை மற்றும் பார்வை பெற்று குரு பார்வை இல்லாமல் இருந்தால் அந்த திசாபுத்தி காலங்களில் மரணம் அல்லது அதற்கு சமமான கண்டங்கள் ஏற்பட்டதுண்டு.)

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



மேற்படி இந்த லக்னத்தில் பிறந்தவர்களுக்கு 5ம் வயதில் அக்னிபயம், 7 வயதில் ஜலபயம்,10 வயதில் சுரத்தாலும்,20 வயதில் வாய் மற்றும் காது சம்பந்தமான நோயாலும்,22 வயதில் பாம்பு/விஷ பயத்தாலும்,25 வயதில் ஜலகண்டத்தாலும்,28 வயதில் பிளவை நோயாலும் பாதிப்புகள் ஏற்படாலம்.

எட்டாமிடம் மற்றும் லக்னம் சுபர்பார்வை பெற்று பலமுடன் இருந்தால் இவருக்கு ஆயுள்பலம் 90-100 வரை உண்டு.மேற்சொன்ன வயதில் மார்கழி மாதத்தில் பௌர்ணமி திதியில் ரோகினி நட்சத்திரம் கூடிய வியாழக்கிழமை இரவு 10 நாழிகைக்குள் தலை சம்பந்தமான நோயால் மரணம் சம்பவிக்கும் என்று சாஸ்திரத்தில் சொல்லப்பட்டுள்ளது.

ஜோதிட சாஸ்திரத்தில் ஆதி முதல் ராசி. இதன் அதிபதி செவ்வாய். ஆண் ராசி. இதன் அதிபதியான செவ்வாயும் ஒரு ஆண் கிரகமே.

முரட்டுத்தனமும் பிடிவாத போக்கையும் கொண்டது. திசைகளில் கிழக்கை குறிக்கும். இது ஒரு பாவ ராசி. மனித அவயங்களில் தலைப்பகுதியை குறிக்கும் ராசி.

ஆனால் இது குட்டை ராசி. இந்த ராசியில் பிறந்தவர்கள் குட்டையான உருவம் கொண்டிருந்தாலும் வாட்டசாட்டமான சட்டம் மாதிரி உடலை பெற்றிருப்பார்கள்.

ஒரு குடும்பத்தில் தலைச்சன் பிள்ளை ஆண் பிள்ளையாக இருந்தால் மேஷ லக்கனத்தில் பிறகும் என்று சொல்லப்படுகிறது. இது பெரும்பாலும் ஒத்தே போகிறது.

மேஷ லக்கனத்தில் பிறந்தவர்களுக்கு உடன் பிறப்புகள் நிறைய உண்டு. இது ஒரு வறண்ட ராசி. இரவில் வலுவுடையது. நெருப்பு ராசியும் கூட. இதில் உச்சம் பெறும் கிரகம் சூரியன். நீச்சம் பெறும் கிரகம் சனி. இது ஆடு மாதிரி உருவம் கொண்டது.

பிறந்தது மேஷ லக்னமா? அப்படியானால் காரியவாதிகள். எதை எதை எப்போ செய்யணுமோ அதை அதை அப்போ செய்ய தெரியும்.

ஒரு பழமொழி இருக்கு. புலியை குட்டியில் கொல்லனும், பாம்பை முட்டையில் கொல்லனும். அந்த கலை கற்றவர் தான் நீங்கள்.

ஒன்னை பத்தாக்கணும், விண்ணை சொத்தாக்கணும் என்பது உங்கள் ராஜ கனவு. ஈடுபடும் காரியத்தில் காட்டும் வேகம் இருக்கே… சும்மா அதிரும்முல்ல.

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



இந்த அணுகு முறையே முரட்டு பிடிவாதம் கொண்டவராக அடையாளம் காட்டும். அது சரி உண்மையும் அதுதானே.

இருப்பினும் ஒன்றை சொல்லியே ஆகணும். சபலம்தான் ஜாஸ்தி. அப்படி இப்படின்னு சந்து பொந்துகளில் சிந்து பாடுவதை நிறுத்த முடியாது.

எப்படியும் ஒரு தொடுப்பு இருக்கும். அது சரி ... சந்தர்ப்பமும் சூழ்நிலையும் ஒத்து போகாத வரை எல்லோருமே நல்லவர் தான். இவரும் நல்லவர்தான் நம்புவோம்.

பொதுவா இந்த லக்னத்தில் பிறந்தவர்களுக்கு பண புழக்கம் நன்னா இருக்கும். வசதியான வாழ்க்கையும், காணி பூமி சேர்க்கையும் கண்டிப்பாக உண்டு.

உத்தியோகம் பார்ப்பதற்கு உகந்தவர்கள். கறார் பேச்சும் கண்டிப்பு தன்மையும் கோவக்கார ஆசாமி என்ற பட்டத்தை வாங்கி தரும்.

பெரும்பாலும் கவுரவம் பார்ப்பவர்கள்.புலிக்கு வாலாக இருப்பதை விட எலிக்கு தலையாக இருப்பது பெருமை என்று நினைப்பவர்கள்.அலைச்சல் திரிச்சலுக்கு அலுப்பு படாதவர்கள். பெறும் பகுதி வெளியூர் பயணம் விரும்பி போவார்கள். வாழ்க்கையில் ஏதாவது திடீர் கண்டம் ஏற்படுமாம். ஆயுதம் நெருப்பு, கிழே விழுந்து அடிபடுதல் இப்படி ஏதாவது அசம்பாவிதம் ஏற்படலாம் என்கிறது ஜோதிடம். இது பொது கருத்து. மேஷ லக்னத்திற்கு அடுத்த திரிகோனமான சிம்மத்தின் அதிபதி சூரிய திசையும், இரண்டாம் அதிபதியான குரு திசையும் நன்மையை செய்யும்.ஆனால் பாதகாதிபதியான சனியோட சம்மந்தம் அறவே கூடாது. குருவின் சுபத்தன்மை கோவிந்தாதான். சனியின் தொடர்பு பெற்ற குரு திசை கொடுத்து கவுத்துவிடும்.

3, 6 க்கு அதிபதியான புதனும் பாதகாதிபதியான சனியும் கொல்ல துணிந்தவர்கள். 2, 7 க்கு அதிபதியான சுக்கிரன் மாரக ஆதிபத்தியம் பெற்றாலும் கொல்வதில்லை. நல்லவன்.

இந்த லக்னத்தில் பிறந்தவர்களுக்கு குரு சூரியன் கூடி இருந்தால் பிரபலயோகம். அப்படி ஒரு அமைப்பை பெற்றவர்கள் வாழ்நாளில் எந்த வகையிலாவது முன்னேற்றத்தை எட்டி விடுவார்கள்.

பூர்வபுண்ணியம் என்கிற அடிப்படிக்கு ஏற்றவாறு, வசதி வாய்ப்புகளுக்கு ஏற்றவாறு வாழ்க்கை தரம் அமைந்து விடும்.

ஆனால் சனி + புதன், சனி +சுக்கிரன், சனி + செவ்வாய், புதன் + செவ்வாய், குரு +

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



சனி, ராகு + சனி, கேது + செவ்வாய், இப்படி ஏற்ப்படும் அமைப்பு மேஷ லக்னத்திற்கு மோசமே. எதிர்பாராத வகையில் எதையாவது செய்து ஜாதகரை தடுமாற செய்து விடும். கடன் தொல்லை, எதிரிகளால் பிரச்சனை, வில்லங்க விககாரங்கள், தொழில் ரீதியில் போட்டி பொறாமை, முடக்கம், நஷ்டம், ஆகியவற்றை தருகிறது.இது மேற்படி கிரக சேர்க்கை பெற்ற தசா புத்திகளில் நடைமுறைக்கு வரும். செவ்வாயின் ஆட்சி வீடு சூரியன் உச்சம் பெறும் விடு சனி நிசம் பெறும் வீடு லக்னத்தில்செவ்வாய் இருந்தால் சிறப்பு ஆனால் அவரே 8க்கும் அதிபதியாகிறார் அதனால் வேறு நல்ல இடங்களில் இருப்பது சிறப்பு ஆகும் 8மிடத்தை கொண்டு பார்த்தால் 8க்குலக்னம் 6மிடமாக வருதால் செவ்வாய் மறைவு பெறுவதாக எடுத்துக் கொண்டாலும் லக்னத்தில் இருக்கும் செவ்வாய் ஏதாவது ஒரு பிரச்னைகளை ஜாதகருக்கு கொடுத்துக் கொண்டேதான் இருப்பார் ஜாதகர் மிக கோபமும் ஆக்ரோஷமும் எதையும் ஆராய்ந்து முடிவு எடுக்க மாட்டார்கள் முதலில் சண்டை பிறகு யோசனை என்று இருப்பார்கள் லக்னத்தில் சனி இருந்தால் ஜாதகரை படு சோம்பேரி ஆக்கி எதற்கும் லாயக்குஅற்று போகசெய்து விடுவார் பிறர் உழைப்பில் வாழும் நிலை இருக்கும் ஆனால் சனி 10-11க்கும் அதிபதியாக வருவதால் தொழில் மொண்டிகுதிரை மெதுவாக செயல் படுத்துவார் 11க்கும் அதிபதியாகி பாதகாதிபதி எனும் நிலை பெறுகிறார் இவர் தொழில் நல்ல முறையில் இருந்தாலும் லாபம் எதிர்பாக்கும் அளவுக்கு கிடைக்கவிடாமல் செய்வார் சனி இவர் எந்த பாவகிரக தொடர்பும் இல்லாமல் இருந்தால் சிறப்பு லக்னசிறப்புக்கள் ஆட்டை சின்னமாக கொண்ட இவர்களுக்கு முளை பலம் உண்டு ஆனாலம் திடபத்திகுறைவு

மேஷம் உடல் வலிமையுடன் உள்ளவலிமையும் இணைந்து மிகுந்த ஆற்றலுடன் செயல்படும் சக்தியுடையது எடுத்த முடிவில் திடமாக இருப்பது முர்க்கதனமான கோபம் முரட்டுத்தனம் பயமற்ற போக்கு தன்னை உயர்த்திக்கொள்வதில் கவனமும் மற்றவர்களை தன் வசப்படுத்தி தன் போக்கிற்கு கொண்டுசெல்லும் இயல்பும் தர்க்க வாதத்தில் தன்னை மிஞ்சியவர்கள் இல்லை என்ற எண்ணமும் உழைப்பில் நம்பிக்கையும் மதபற்றும் சாதனை செய்வதில் ஆர்வமும் சுவையான உணவில் விருப்பமும் குடும்பத்தில் அக்கறையும் குடும்ப தலமையும் தற்புகழ்ச்சியும் தான் செய்யும் செயல் வெளிக்காட்டாத ரகசிய உறவுகளில் விருப்பமும் தாய் தந்தையை மதித்து போற்றுவதும் இயற்கையான ஆற்றலும் அறிவும் கொண்டதாக விளங்கும் இறுதி ஆத்மா இந்த சரீரத்தை விட்டு வேறு பிறப்பை நோக்கி செல்லக்கூடியது ஆகவே இதை சுடுகாட்டு நெருப்பு என்றும் சொல்லாம் ஆத்மகாரனகிய சூரியனை இந்த ராசியில் உச்சபடுத்தி பெருமை சேர்த்தார்கள் உடலும் உயிரும் சேர்ந்து பரிணமிக்கும் போது காரண சரீரமாகவும் காரீயசரீரமாகவும் சூட்சும சரீரமாகவும்

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



செயல்படும் ஆத்மகாரகன் சூரியன் இந்த உடலில் இருக்கும் வரை இந்த மூன்று நிலைகளும் தம் தம் கடமைகளை சரிவர செய்து கொண்டே இருக்கும்.

கால புருஷனின் முதல் வீடு இந்த ராசியின் அதிபதி செவ்வாய் இது தன்மையில் சரமாகவும் தத்துவத்தில் அக்னி யாகவும் பருவத்தில் வெயில் காலமாகவும் ஆண் ராசியாகவும் நாற்கால் உடையதும் மாதத்தில் சித்திரையாகவும் உருவத்தில் ஆடாகவும் சிகப்பு நிறமாகவும் காடு போன்ற வனப்பகுதியும் மூலத்தில் தாது வாகவும் இருக்கிறது மேஷம் என்றாலே ஆட்டின் தலை என்று சின்னமாக வைத்துள்ளார்கள் ஆடு என்றாலே தலையில் பலம் எனவெ இந்த ராசியில் பிறந்தவர்களுக்கு மூளை பலம் அதிகம் ஆடு என்றாலே மந்தை என்று தான் கூற வேண்டும் ஒரு ஆடு இந்த மந்தையில் இருந்து வெளியேறினால் மற்ற ஆடுகளும் அதன் பின்னெ செல்ல தொடங்கும் இதை போன்றே இந்த ராசியில் பிறந்தவர்கள் தன்னை சுற்றி ஒரு கூட்டத்தை ஏற்படுத்திக் கொண்டு அதற்கு தலைமை அல்லது காக்கும் பொறுப்புகளைஏற்று நடக்கும் திறமையும் இருக்கும் இந்த ராசி கர்ம மேன்மையால் மிக பெரியபதவி தலைமை பொறுப்பை அலங்கரிக்க கூடியவர்களாகவும் சுயநல மிகுந்தும் காணப்படும் ஆடுகளை கவனித்தால் தெரியும் இரை எடுக்கும் போது தான் முந்திக்கொண்டு இரைகளை கையகபடுத்தும் இந்த ஆட்டிற்கு போர் குணம் இருக்கும் ஆகையால் இவர்கள் ராணுவத்திற்கு உகந்தவர்கள் மேஷத்தில் பிறந்தவர்கள் எப்படி வாழ்வார்கள் என்பதை விட எப்படி வாழ வேண்டும் என்பதை பார்ப்போம் இவர்கள் பொருளாதரத்தில் உயர்வு பெற நித்திய ஆலய வழிபாடு காரணம் நிதி இருந்தால் தனம் தானாக வரும் இவர்களுக்கு 2ம் வீடு ரிசபம் இது நல்ல குடும்ப பாங்கான மனைவியை கொடுக்கக் கூடியது இவர்களுக்கு வரும் மனைவியை கண்கலங்காமல் பார்த்தால் இவர்களுக்கு செல்வ செலிப்பு ஏற்படும் இவர்கள் குடும்ப தேவைகளை செய்ய மேன்மை அடைவார்கள் இவர்களுக்கு குடும்பம் அமைந்து குழந்தை பிறந்தால் வாழ்வில் அனைத்து வசதிகளும் வந்து விடும் காரணம் மேஷராசியில் சுக்ரனின் நட்சத்திரம் இருப்பதால் சுக்ரன் 2-7 க்குடையவரால் வாழ்க்கை துணையை கொடுத்து வசதி வாய்ப்புக்கள் கொடுக்க வரும் போது கிடைக்கும் பொருளாதரத்தை தன் தேவைகளை பூர்த்தி செய்து கொள்ளும் பொருட்டு ரிசபத்தில் சந்திரன் இருப்பதும் சந்திரனின் நட்சத்திரம் இருப்பதும் இவர்களுக்கு சந்திரன் சுகஸ்தானதிபதி என்பதை கவனிக்கவேண்டிய ஒன்று.

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



**செவ்வாய்**

**சிகப்பு கிரகம் என அழைக்கப்படும் செவ்வாய் சூரியனிலிருந்து நான்காவதாக உள்ளது. சூரியனிலிருந்து இதன் தொலைவு 227,900,000 கிலோமீட்டர்களாகும். இது ஒரு ராசியை கடக்க சுமார் 43 நாட்கள் ஆகிறது. இது மகரம் 28 பாகையில் உச்சமும், கடகம் 28 பாகையில் நீசமும், மேஷம் 0-12 பாகையில் மூலத்திரிகோண பலமும் பெறுகிறது. சூரியன், சந்திரன், வியாழன் இதன் இயற்கை நண்பர்கள், புதன் எதிரி, வெள்ளி, சனி சம கிரகங்கள். இது சுபாவ பாப கிரகம் ஆகும். இதன் காரகங்கள் தைரியம்,சகோதரன், வீரம், கோபம், உடல் வலிமை, ஆக்ரோஷம், போர், ஆட்சி திறமை, ஆயுதங்கள் பயன்படுத்தும் திறமை, தலைமை பண்பு, புகழ், வெற்றி, குரூரம், வாள், அறுவை சிகிச்சை, கத்தி,ஊர் தலைவன், இராணுவ தளபதி, வெப்பம், கோடை காலம், நெருப்பு, பூமி, எரிந்த இடம், தங்கம், தாமிரம், நல்ல உணவு, பேச்சு, பாம்பு, சிகப்பு, இரத்தம், கசப்பு காரம் ஆகியனவாகும்**

**ஆட்சி பெற்ற கிரகங்கள்**

**ஒரு ராசியின் சொந்த காரர் தனது ராசியில் தனியாக (வேறு கிரக சேர்க்கை இல்லாமல் ) தங்கி இருக்கும்போது அதிக பலமுடனும், தனது ஸ்தானத்திற்கு நல்ல பலன்களை அள்ளி தரும்.**

**செவ்வாய் - மேஷம், விருச்சிக ராசிகளுக்கு சொந்தகாரர்**

**ஒரு கிரகம் தனது ஆட்சி வீட்டில் வக்கிரம் பெறலாம் (பொது விதி)**

**ஒரு கிரகம் ஆட்சி வீட்டில் ராகு கேதுவுடன் சேர்ந்து அஸ்தங்க தோஷம் அடைந்தால் நல்ல பலன் தர இயலாது.**

**இரு கிரகங்கள் நல்ல நிலையில் ஆடசி பெற்றால் ஒரு சாதகன் பூபதி போல் வாழ்வான் என ஜோதிட கலை கூறுகிறது.**

**உச்சம் பெற்ற கிரகங்கள்**

**ஒரு உச்சம் பெற்ற கிரகம், பகை பெற்ற ஒரு கிரகத்தின் நட்சத்திர காலில் (நட்சத்திரத்தில் பிறந்த ) உருவானதாக இருந்தால் பலன் இல்லை. இரு உச்ச கிரகங்கள் ஒருவரை ஒருவர் பார்த்தாலோ பரிவர்த்தனை கொண்டாலோ துன்பமே. நீட்ச வீட்டின் எதிர் வீடு உச்சவீடாகும். நல்ல கிரகங்கள் நல்ல இடத்தில (6,8,12,தவிர)**

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



**உச்சம் பெற்றால் சுபம். கெட்ட கிரகங்கள் கெட்ட இடத்தில உச்சம் பெறுவதும் நல்லது**

**சூரியன் - மேஷத்தில் உச்சம்**

**சந்திரன் - ரிஷப ராசியில் உச்சம்**

**குரு - கடகத்தில் உச்சம்**

**புதன் = கன்னி ராசியில் உச்சம்சுக்கிரன் – மீன ராசியில் உச்சம்சனி – துலா ராசியில் உச்சம்ராகு - ரிஷபத்தில் உச்சம்கேது – விருட்சிகத்தில் உச்சம்.**

**சில ஜாதகருக்கு உச்சம் பெற்ற கிரகம் தனது திசை புக்தியில் கூட செயல் இல்லாமல் இருப்பதை பார்க்க முடியும். அதாவது உச்சம் பெற்றும் பலன் இல்லை என்பது போல்…அதற்க்கு டிகிரி கணிதம் என்று ஒன்று உள்ளது. அதாவது ஒவ்வொரு கிரகமும் ஒரு ராசியில் எந்த டிகிரியில் உச்சம் பெறுகிறது என்பதை பொறுத்து உச்ச கிரகத்தின் நல்ல பலன் அமையும்.**

**நீச்சம் பெற்ற கிரகங்கள்**

**உச்சத்தின் எதிர்விளைவு நீச்சம். உச்ச கிரகங்கள் நன்மை செய்கின்றது என்றால் நீட்ச கிரகங்கள் தீமை செய்யும். ஆனால் சில இடங்களில் (லக்னத்திற்கு இத்தனையாவது வீடு என்ற கணக்கில்) நீச்ச கிரகங்கள் நன்மையும் செய்யும். நீச்சம் பெற்ற கிரகம் உள்ள ராசியின் அதிபதி ராசியிலோ அல்லது அம்சத்திலோ ஆட்சி, உச்சம், லக்ன கேந்திரம் என்ற அமைப்பினை பெற்றால் அதுவே நீச்ச பங்க ராஜயோகம் என்று பொருள்.**

**சூரியன் – துலாம் ராசியில் நீச்சம்**

**சந்திரன் - விருச்சிகம் ராசியில் நீச்சம்**

**செவ்வாய் - கடக ராசியில் நீச்சம்**

**புதன் – மீன ராசியில் நீச்சம்**

**குரு – மகர ராசியில் நீச்சம்**

**சுக்கிரன் -கன்னி ராசியில் நீச்சம்**

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



**சனி - மேஷ ராசியில் நீச்சம்**

ராகு -விருச்சிக ராசியில் நீச்சம்

கேது -ரிஷப ராசியில் நீச்சம்

மூலதிரிகோணம்

திரிகோணம் என்பதற்கும் மூலதிரிகோணம் என்பதற்கும் ஜோதிடத்தில் உள்ள வித்தியாசம் என்ன வென்றால் திரிகோணம் என்பது லக்னம் மற்றும் ராசியில் இருந்து எண்ணிவர முறையே 1,5,9 இடங்களாகும். ஆனால் மூலதிரிகோணம் என்பது ஒவ்வொரு கிரகத்திற்கும் ஆட்சி உச்சம் பெறும் அமைப்பை போன்று இந்த மூலதிரிகோண அமைப்பு ஏற்படுகிறது. அதாவது ஒரு கிரகத்திற்கு மூலதிரிகோண வீடு ஒரு வீடு மட்டுமே. ஆட்சி, உச்சம், மூலதிரிகோணம் ஆகியவை ஒரு ஜாதகருக்கு நன்மை செய்வதில் ஒன்றை விட ஒன்று உயர்ந்தது.

இப்போது ஒரு கிரகத்தின் மூலதிரிகோண வீடு என்ன வென்று பாப்போம்:

சூரியன் - சிம்மராசி மூலதிரிகோண வீடு.

சந்திரன் – ரிஷப ராசி மூலதிரிகோண வீடு.

செவ்வாய் – மேஷ ராசி மூலதிரிகோண வீடு.

புதன் - கன்னி ராசி மூலதிரிகோண வீடு.

குரு - தனுசு ராசி மூலதிரிகோண வீடு.

சுக்கிரன் - துலா ராசி மூலதிரிகோண வீடு.

சனி – கும்ப ராசி மூலதிரிகோண வீடு.

ராகு - ரிஷப ராசி மூலதிரிகோண வீடு.

கேது - விருச்சிக ராசி மூலதிரிகோண வீடு.

ஆக திரிகோணம் என்பது ஒரு வீட்டிற்கும் மூலதிரிகோணம் என்பது ஒரு கிரகத்திற்கும் உண்டானது என்பது இப்போது புரியும்.

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



**செவ்வாயின் ஆட்சி, உச்ச, நீச்ச, நட்பு மற்றும் பகை வீடுகள்**

**கேளப்பா செவ்வாய்க்கு மேஷம் தேளும்**

**கெணிதமுட னாட்சியது வாகும்பாரு**

**நாளப்பா மகரமது உச்சமாகும்**

**நலமில்லா நீசமது கடகமாகும்**

**தாளப்பா தனுமீனம் ரிஷபம் கும்பம்**

**தயங்குகின்ற கோதையுடன் மிதுனம் நட்பாம்**

**பாளப்பா கால்சிங்கம் பகையாமென்று**

**பண்புடனே போகரெனக் குரைத்தார்தானே**

**செவ்வாய் கிரகத்திற்கு மேஷமும் விருச்சிகமும் ஆட்சி வீடாகும். சனி வீடான மகரம் உச்ச வீடாகும். கடகராசி நீச்ச வீடாக அமைந்து துர்ப்பலன் தரும். தனுசு, மீனம், ரிஷபம் ஆகியவற்றினோடு கன்னியும், மிதுனமும் நட்பு வீடுகளாகும். துலாமும் சிம்மமும் பகைவீடாம் என்று பண்பாகப் போகர் எனக்குச் சொன்னதை உரைத்திட்டேன். [எ-று]**

**இப்பாடலில் செவ்வாயின் ஆட்சி, உச்ச, நீச்ச, நட்பு மற்றும் பகை வீடுகளைப் புலிப்பாணி விவரிக்கிறார்.**

**செவ்வாய் ஒவ்வொரு வீட்டிலும் இருந்தால் என்ன பலன் என்று பார்க்கலாம்**

**செவ்வாய் 1 ல் இருந்தால் தலையில் அடிபடும். செவ்வாய் ஒன்றாம் வீட்டில் இருந்து 7 ம் பார்வையாக 7 ம் வீட்டை பார்ப்பதால் திருமண வாழ்வில் சங்கடங்கள் ஏற்படும். செவ்வாய் முதல் வீட்டில் இருப்பதால் மூர்க்கதனமாக கோபம் வரும். தாயாருக்கு தீங்கு விளைவிக்கும். கோபம் அதிகரிக்கும். இளம்தோற்றமாக காணப்படும். உடம்பில் உஷ்ணம் காரணமாக கட்டி ஏற்படும். நல்ல தைரியசாலிகளாக இருப்பார்கள். தலையில் அடிப்படும். ஏதாவது விதத்தில் தலையில் அடிப்படும். செவ்வாய் தசையில் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். செவ்வாக்கு சொந்த வீடாக**

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



அல்லது உச்ச வீடாக இருந்தால் நல்லது நடக்கும்.

செவ்வாய் 2 ம் வீட்டில் இருந்தால் வாக்கில் கடுமை இருக்கும். பேச்சில் சண்டை வரும். செவ்வாய்க்கு சொந்த வீடாகவோ உச்சவீடாக இல்லாவிட்டால் அவர் சொல்லே அவருக்கு விரோதமாக ஆகும். கையில் காசு தங்காது. செவ்வாய் இரண்டில் இருப்பதால் குடும்பத்தில் சண்டை சச்சரவுகள். கண்ணில் தொந்தரவு இருக்கும். செவ்வாய் பலம் பெற்று இருந்தால் நல்லது நடக்கும். செவ்வாய் இரண்டில் இருப்பதால் தோஷம் ஏற்படும்.

செவ்வாய் 3 ம் வீட்டில் இருந்தால் நல்ல தைரியசாலியாக இருப்பார். காதில் தொந்தரவு இருக்கும். செல்வம் நிறைய கிடைக்கும். நல்ல அறிவாற்றல் கிடைக்கும். உடம்பு நல்ல உறுதியாக இருக்கும். இளைய சகோதரருக்கு கெடுதல் செய்யும். சிலபேருக்கு இளைய சகோதர,சகோதரிகள் இருக்க மாட்டார்கள். 3 ஆம் வீட்டில் செவ்வாய் பலம் பெற்றால் நல்ல வாழ்க்கை அமையும். 3 ஆம் வீட்டு செவ்வாய் மூலம் தாய்நலம் கெடும்.

செவ்வாய் 4 ம் வீட்டில் இருந்தால் தாய்வீட்டின் சொத்து கிடைக்கும். தாயின் உடல்நிலை மோசமாக இருக்கும். கணவன் மனைவி சண்டை சச்சரவு இருக்கும். நல்ல சொத்துக்கள் சேரும். 4 ஆம் வீட்டு செவ்வாய் பலம் குறைந்தால் வாழ்க்கையில் வசதி வாய்ப்பு குறையும். மார்பில் வலி ஏற்படும்.

செவ்வாய் 5 ஆம் வீட்டில் இருந்தால் புத்திரதோஷம் ஏற்படும். புத்தி மங்கும். குழந்தைகளால் சண்டை சச்சரவுகள் ஏற்படும். வயிற்றுவலி ஏற்படும். எதிரிகளால் தொல்லை வரும். பணவரவு இருக்காது. 5 ஆம் வீடு செவ்வாய்க்கு சொந்த வீடாகவோ அல்லது உச்சவீடாகவோ இருந்தால் தடைகள் அனைத்தும் அகலும். 5 ஆம் வீடு நாம் எந்த தெய்வத்தை வணங்க வேண்டும் என்று காட்டும் இடம் ஆகையால் செவ்வாய் 5-ல் இருந்தால் சுப்பிரமணியரை வணங்க வேண்டும்.

செவ்வாய் 6 ஆம் வீட்டில் இருந்தால் எதிரிகளை வெற்றிகொள்ளும் தைரியும் இருக்கும். நல்ல சொத்துக்கள் சேரும். செவ்வாய் காமம் அதிகமாக இருக்கும். தாய்மாமனுக்கு தொல்லை தருவார். நல்ல செரிக்கும். இரத்தம் மாசுபடும் அதனால் உடலில் கட்டி ஏற்படும். நல்ல கற்றவர்களிடம் தொடர்பு ஏற்படும். புகழ் ஏற்படும். 6 ஆம் வீட்டு செவ்வாயினால் பெரும் பொருட்செலவு ஏற்படும்.

செவ்வாய் 7 ஆம் வீட்டில் இருந்தால் 7 ஆம் பார்வையாக லக்கினத்தை பார்ப்பதால்

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



தலையில் அடிபடும். திருமண வாழ்க்கையில் பிரச்சனை ஏற்படும். செவ்வாய்க்கு நட்பு வீடாக இருந்தாலும் சொந்த வீடாக அல்லது உச்ச வீட்டில் இருந்தால் பிரச்சினைகள் இருக்காது. பெண்களால் பிரச்சினை உண்டாகும். இவரிடம் தொடர்பு வைத்திருப்பவர்கள் முன்கோபக்காரர்களாக இருக்ககூடும்.

8 ஆம் இடத்து செவ்வாயினால் கண் பார்வை கெடும். ஜெயிலுக்கு செல்ல நேரிடும். இரத்த சம்பந்தமாக பிரச்சினை ஏற்படும்.கடன் பளு ஏற்படும். ஆயுள் குறையும். கோபம் அதிகம் வரும். சகோதர்களின் நலம் கெடும். பொருளாதாரம் அதிகம் பாதிக்கப்படும்.

9 ஆம் இடத்தில் உள்ள செவ்வாய்யால் தந்தையாரின் நலம் கெடும். தந்தைக்கும் இவருக்கும் சண்டை சச்சரவு இருந்து கொண்டே இருக்கும். 9 ஆம் இடத்தில் உள்ள செவ்வாய்யால் தந்தையாரின் நலம் கெடும். தந்தைக்கும் இவருக்கும் சண்டை சச்சரவு இருந்து கொண்டே இருக்கும். நற்பணிகள் செய்யமாட்டார். கொடிய செயல்கள் செய்ய வைப்பார். 9 ஆம் வீட்டு செவ்வாய் ஆட்சி அல்லது உச்சம் பெற்றால் நல்ல நிலைக்கு உயர்த்துவார்.

10 ஆம் இடத்தில் உள்ள செவ்வாய்யால் கனரக வாகனங்கள் தொழிற்சாலையில் உயர்ந்த பதவியில் அமர வைப்பார். பதவியில் தலைமை இடம் தேடி வரும். நெருப்பு மூலமாகவும் வருமானம் பெருகும். பெரிய மனிதர்களிடம் இருந்து பெரிய பொறுப்புகள் தேடி வரும்.

11 ஆம் இடத்து செவ்வாய் பெரும் பணக்காராக மாற்றுவார். மகிழ்ச்சி நிறைந்து இருக்கும். பெரும் செலவு செய்து தொழிலில் முன்னேற்றம் காண வைப்பார். பணப்புழக்கம் நன்றாக இருக்கும். மூத்த சகோதர சகோதரிகளிடம் சண்டை சச்சரவு ஏற்படும்.

12 ஆம் வீட்டு செவ்வாயினால் கெடுதல் அதிகம் இருக்கும். சிறை செல்ல நேரிடும். பெண்கள் மூலம் பொருளாதார இழப்பு ஏற்படும். மர்ம விலங்கினால் ஆபத்து ஏற்படும்.

பாதகாதிபதி

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



**மேஷம் , கடகம் , துலாம் , மகரம் ஆகிய லக்னங்களுக்கு - 11 ஆம் வீடு மற்றும் அதன் அதிபதி பாதகாதிபதி ஆகும்.**

**ரிஷபம் , சிம்மம் , விருச்சிகம் , கும்பம் ஆகிய லக்னங்களுக்கு - 9ஆம் வீடு மற்றும் அதன் அதிபதி பாதகாதிபதி ஆகும்.**

**மிதுனம் , கன்னி , தனுசு , மீனம் ஆகிய லக்னங்களுக்கு - 7 ஆம் வீடுமற்றும் அதன் அதிபதி பாதகாதிபதி ஆகும்.**

**பாதகாதிபதி பலம் வாய்ந்த எந்த பாவங்களில் இருக்கிறாரோ அந்த பாவங்களில் உருவாகும் பலன்களில் பாதகத்தை செய்வர் .மேலும் பாதகாதிபதி எந்த இடத்தை பார்க்கிறாரோ அந்த இடத்தின் பலன்களும் பாதிக்கப்படும்  இந்த பாதகாதிபதி தீமையான பலன்களை தமது தசா புக்தி காலங்களில் தருவார்.  பாதகாதிபதியை விட பாதக ஸ்தானத்தில் அமரும் கிரகம் அதிக பாதகத்தை தரும் என்பது ஜோதிட விதி.**

**பாதகாதிபதி தசை நடகின்றது அப்பொழுது அவனுக்கு பாதகமான செயல்கள் நடக்கும். அவனை அதிகம் துன்பபட வைக்கும்.**

**லக்கினாதிபதி நின்ற பலன்கள்**



**லக்கினாதிபதி 1ஆம் வீட்டில் அதாவது லக்கினத்தில் இருந்தால்:**

**ஜாதகன் சுதந்திர மனப்பான்மையுடன் தன்னிச்சையாக வாழ்பவனாக**

**இருப்பான். யார் சொன்னாலும், அவர்கள் பேச்சைக் கேட்கமாட்டான்**

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



தன் எண்ணப்படி, நோக்கப்படி வாழ்பவனாக இருப்பான்.

ஜாதகன் தீர்க்க ஆயுளை உடையவனாக இருப்பான்.

சொத்துக்களை உடையவனாக இருப்பான்.

பெருமைகள், புகழை உடையவனாக வளர்வான்.

வாழ்க்கையில் ஜீவனம் நல்லமுறையில் நடைபெறும்.

மகிழ்ச்சி நிறைந்தவனாக இருப்பான்.

தெய்வ நம்பிக்கை, தெய்வ வழிபாடுகள் மிகுந்தவனாக இருப்பான்.

உறவினர்களுடன் பிரச்சினைகள் இன்றி ஒற்றுமையுடன் வாழ்வான்.

தனது ஊரில், அல்லது தனது மாவட்டத்தில் அல்லது தனது இனத்தில் அல்லது தனது நாட்டில் செல்வாக்கும், புகழும் பெற்றவனாகத் திகழ்வான்.

மேற்கூறிய பலன்கள் எல்லாம் லக்கினமும், லக்கினாதிபதியும் நன்றாக இருந்தால் மட்டுமே. இல்லையென்றால் அவற்றிற்கு நேர் மாறான பலன்களே நடைபெறும்

---

லக்கினாதிபதி 2ஆம் வீட்டில் வலிமையுடன் இருந்தால்:

ஜாதகன் உயர்ந்த பண்புகள் உள்ள குடும்பத்தில் பிறந்தவனாக இருப்பான். அவனுடைய குடும்ப வாழ்க்கை சிறப்பாக இருக்கும்.

வாக்கு வன்மை நிறந்தவனாக இருப்பான். அவன் சொற்கள் எல்லா இடங்களிலும் எடுபடும்.

தனது குடும்பத்திற்காக பல தியாகங்களைச் செய்பவனாக இருப்பான்

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



தன் குடும்பத்திற்கான தன்னுடைய கடமைகளை நிறைவேற்றுபவனாக இருப்பான்.

செல்வமும், செல்வாக்கும் மிகுந்தவனாக இருப்பான்.

மன அமைதியும், மகிழ்ச்சியும் நிறைந்தவனாக இருப்பான்,

---

லக்கினாதிபதி 3ஆம் வீட்டில் வலிமையுடன் இருந்தால்:

ஜாதகன் அதீத துணிச்சல் உள்ளவனாக இருப்பான்.

அதிர்ஷ்டமுள்ளவனாக இருப்பான்.

எல்லா நலன்களும் அவனைத் தேடி வரும்.

மரியதைக்குரியவனாகவும், புத்திசாலியாகவும் இருப்பான்

சிலருக்கு இரண்டு மனைவிகள் இருப்பார்கள்

ஜாதகன் சகோதரர்கள், சகோதரிகளின் அன்பைப் பெற்றவனாக இருப்பான், அவர்களுடன் ஒற்றுமையாக வாழ்வான்.

நுண்கலைகளில் தேர்ச்சி பெற்றவனாக இருப்பான்.

செல்வம், செல்வாக்கு, அந்தஸ்துடன் வாழ்பவனாக இருப்பான்.

---

லக்கினாதிபதி 4ஆம் வீட்டில் வலிமையுடன் இருந்தால்:

ஜாதகன் தன் பெற்றோர்களால் மிகுந்த மகிழ்ச்சிக்கு ஆளாகுவான்

அனேக உடன் பிறப்புக்கள் இருக்கும்.

அழகான தோற்றத்தை உடையவனாகவும், நற்பண்புகளை உடையவனாகவும்

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



**ஜாதகன் இருப்பான்**

ஜாதகன் நிலபுன்கள், வீடு வாசல்களைப் பெற்றவனாக இருப்பான்.

நல்ல குடும்ப உறுப்பினர்களைப் பெற்றவனாக இருப்பான்.

ரோட்டி, கப்டா, மக்கான் என்னும் உண்ண உணவு, உடுக்க உடைகள், இருக்க இடம் என்னும் அடிப்படைத் தேவைகளுக்குக் குறைவில்லாத வாழ்க்கையைப் பெற்றவனாக இருப்பான்.

தாயின் அன்பையும், அரவணைப்பையும் பெற்றவனாக இருப்பான்.

தாய்வழி உறவினர்களின் அன்பைப் பெற்றவனாக இருப்பான்.

கல்வி கேள்விகளில் தேர்ச்சி பெற்றவனாக இருப்பான்

சுகவாசியாக இருப்பான்.

வண்டி, வாகனங்களை உடையவனாக இருப்பான்.

இத்துடன், ஜாதகத்தில் 4ஆம் வீட்டிற்கு உரிய கிரகமும் வலிமை பெற்றிருந்தால் மேற்கூரிய பலன்கள் இரட்டிப்பாகக் கிடைக்கும்.

---

லக்கினாதிபதி 5ஆம் வீட்டில் வலிமையுடன் இருந்தால்:



ஜாதகன் புத்திர பாக்கியங்களைப் பெற்றவனாக இருப்பான். அதாவது நிறைய மக்களைப் பெற்றவனாக இருப்பான். அதோடு தன்னுடைய குழந்தைகளின் அன்பையும், ஆதரவையும் பெற்றவனாக இருப்பான்.

ஜாதகன் பெருந்தன்மை உடையவனாகவும், சேவைமனப்பான்மை உடையவனாகவும் இருப்பான்.

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



**மொத்தத்தில் வாழ்க்கை மகிழ்ச்சி நிறைந்ததாக இருக்கும்**

சிலருக்கு அரசியல் செல்வாக்கும், ஆட்சியாளர்களின் ஆதரவும்
இருக்கும்

---

**லக்கினாதிபதி 6ஆம் வீட்டில் வலிமையுடன் இருந்தால்:**

******** ஜாதகன் நோய் நொடிகள் நிறைந்து அவதிப்படுபவனாக இருப்பான்.
எதிரிகள் நிறைந்தவனாக இருப்பான்.
பல அவதூறுகளுக்கு ஆளாக நேரிடும்
பலவிதங்களில் கடன் ஏற்பட்டுப் படுத்தி எடுக்கும்.
மொத்தத்தில் மன அமைதி இல்லாத வாழ்க்கை வாழ நேரிடும்
லக்கினாதிபதியின் தசை அல்லது புத்திக் காலங்களில் கடன் மற்றும்
நோய்களுக்குத் தீர்வு கிடைக்கும்.
லக்கினாதிபதி வலுவாக உள்ளவர்கள் ராணுவத்தில் பணிபுரிந்து
சிறப்பைப் பெறுவார்கள்
சிலர் மருத்துவத்துறையில் பணிபுரிந்து பெருமையடைவார்கள்

---

**லக்கினாதிபதி ஏழாம் வீட்டில் அமர்ந்தால் ஏற்படும் பலன்:**

சிலருக்கு ஒன்றிற்கு மேற்பட்ட திருமணம் நடைபெறும்.
சிலர் வாழ்க்கையின் பின் பகுதியில் சந்நியாசியாகி விடுவார்கள்.
மற்ற கிரகங்களின் அமைப்பை வைத்து ஜாதகன் செல்வந்தனாக

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



இருப்பான் அல்லது ஏழையாக இருப்பான்.

ஜாதகன் 'தான்' என்னும் குணமுடையவனாக இருப்பான்.

மனைவியால் சொத்துக்கள் கிடைக்கும்.

சிலருக்கு மனைவியின் வருமானத்தால் சொத்துக்கள் கிடைக்கும்.

சிலர் பெண்ணாசை மிகுந்தவர்களாக இருப்பார்கள்.

எப்போதும் பெண்களின் நினைவாகவே இருப்பார்கள்

எந்தத் தொழிலிலும் அக்கறையில்லாமல் இருப்பார்கள்.

இந்த அமைப்பை சுபக்கிரகங்கள் பார்த்தால் ஜாதகன் வெளிநாடு

சென்று, பெரும்பொருள் ஈட்டி மகிழ்வுடன் வாழ்வான்.

===========================================

லக்கினாதிபதி எட்டாம் வீட்டில் அமர்ந்தால் ஏற்படும் பலன்:

ஜாதகன் கல்வியில் சிறந்தவனாக இருப்பான்.

சூதாட்ட மனப்பான்மை மிகுந்திருக்கும்.

ஒழுக்கக் குறைவு ஏற்படும்.

சிலருக்கு மரணம் - அது வரும் நேரத்தில் அமைதியானதாகவும்,

ஒரு நொடியில் ஏற்படுவதாகவும் அமையும்.

இந்த அமைப்பை சுபகிரகம் பார்த்தால், ஜாதகன் நீண்ட ஆயுளை

உடையவன். ஆனால் வாழ்க்கை சிரமத்துடன் நடக்கும்.

ஜாதகன் பலரின் மனக்கசப்பிற்கு ஆளாக நேரிடும்.

சிலருக்கு உடலில் அங்கக் குறைபாடுகள் இருக்கும்

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



**சிலருக்கு குழந்தை பாக்கியம் இருக்காது. தத்துப் பிள்ளையை எடுத்து வளர்க்க நேரிடும்.**

**இந்த அமைப்பை பாபக்கிரகம் பார்த்தால், ஜாதகன் மத்திம ஆயுளை உடையவன்.**
**வாழ்க்கையில் வறுமை ஏற்பட்டுப் படுத்தி எடுக்கும்**
**சிலருக்குப் பலவிதங்களில் அவப்பெயர் உண்டாகும்.**
**================================================**
**லக்கினாதிபதி ஒன்பதாம் வீட்டில் அமர்ந்தால் ஏற்படும் பலன்:**

**பொதுவாக இந்த அமைப்பு மிகவும் அதிர்ஷ்டகரமானதாகும்.**
**ஜாதகன் பலருக்கும் உதவுபவனாக இருப்பான்.**
**நல்ல மனைவி, குழந்தைகள் கிடைக்கும் அமைப்பு இது.**
**இது பாக்கியஸ்தானம் அதை மனதில் கொள்க!**
**ஜாதகனுக்கு எல்லா பாக்கியங்களும் கிடைக்கும்.**
**இந்த அமைப்பை சுபகிரகம் பார்த்தால், ஜாதகனுக்கு நல்ல தந்தை கிடைப்பார். அவரால் ஏற்படும் சகல பாக்கியங்களும் ஜாதகனுக்குக் கிடைக்கும். முன்னோர் சொத்துக்கள் கிடைக்கும்**
**ஜாதகன் பெரியவர்களை மதிக்கும் குணம் உடையவனாக இருப்பான்**
**சிறந்த பக்திமானாக விளங்குவான்.**
**தர்மத்தைக் கடைப்பிடிப்பவனாக இருப்பான்,**
**நேர்மையாளனாக இருப்பான்.**

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



வாழ்க்கை மகிழ்ச்சி நிறைந்து இருக்கும்.

இந்த அமைப்பை பாபக்கிரகம் பார்த்தால், மேற்சொன்ன பலன்கள் எதுவும் இருக்காது.

==================================================

லக்கினாதிபதி பத்தாம் வீட்டில் அமர்ந்தால் ஏற்படும் பலன்:

தொழிலில் அல்லது வேலையில் பல வெற்றிகளைப் பெறுவதற்கான அமைப்பு இது.

பத்தாம் அதிபதிக்கும், லக்கின அதிபதிக்கும் சம்பந்தப்பட்ட தொழிலைச் ஜாதகன் செய்து அதில் மேன்மையடைவான்.

இந்த அமைப்பை சுபகிரகம் பார்த்தால், ஜாதகனுக்கு நல்ல தொழில் அல்லது நல்ல வேலை அமையும். கை நிறையச் சம்பாதிப்பான்.

நற்பெயரையும், செல்வாக்கையும் உடையவனாக இருப்பான்.

தொழிலில் மேன்மை அடைவான்.

அதிகாரமும், பதவிகளும் தேடிவரும்.

அரசியல் செல்வாக்கு அல்லது அரசாங்க செல்வாக்கு இருக்கும்.

சிலர் தலைமைப் பதவிவரை உயர்வார்கள்.

நிலபுலன்கள், பெரிய வீடு, வண்டி, வாகன வசதிகளுடனான வாழ்க்கை ஏற்படும்.

==================================================

லக்கினாதிபதி பதினொன்றாம் வீட்டில் அமர்ந்தால் ஏற்படும் பலன்:

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



இந்த அமைப்பை சுபகிரகம் பார்த்தால், ஜாதகன் லாபகரமான தொழிலைச் செய்வான்.

நற்பெயரும், செல்வாக்கும் தேடிவரும்.

மூத்த சகோதர, சகோதரிகளின் ஆதரவு இருக்கும்.

இந்த அமைப்பை சுபக்கிரகங்கள் பார்த்தாலும், அல்லது இந்த பதினொன்றாம் இடத்து அதிபதி உச்சம் அல்லது ஆட்சி பெற்று இருந்தாலும், ஜாதகனுக்கு நீண்ட ஆயுள்.

ஜாதகனுக்கு, அவனுடைய 2ஆம் வீட்டினால் ஏற்படும் பயன்களுடன் இந்த அமைப்பும் சேர்ந்து மேலும் பலவிதமான நன்மைகளைச் செய்யும் Gains; Gains: Gains - அவ்வளவுதான்.

ஜாதகனுக்குப் பணக்கஷ்டமே இல்லாத வாழ்க்கை அமையும்.

இந்த அமைப்பைப் பாபக்கிரகம் பார்த்தால், ஜாதகனுக்கு மேற்கூறிய நன்மைகள் இருக்காது.

ஜாதகனுக்குப் பலவிதமான கஷ்டங்கள், நஷ்டங்கள் உண்டாகும்

==================================================

லக்கினாதிபதி பன்னிரெண்டாம் வீட்டில் அமர்ந்தால் ஏற்படும் பலன்:

எவ்வளவு பணம் இருந்தாலும், அல்லது வந்தாலும் அது கரைந்து கொண்டே இருக்கும்.

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



எட்டாம் வீட்டினால் ஏற்படும் கஷ்டங்களுடன், இந்த அமைப்பின் கஷ்டங்களும் சேர்ந்து கொண்டு படுத்தி எடுக்கும்.

வியாபாரம் செய்தால் லாபமே இருக்காது. நஷ்டம்தான் ஏற்படும். வாழ்க்கையில் நிறையப் பொருள் இழப்புக்களைச் சந்திக்க நேரிடும்.

இந்த அமைப்பே சரியில்லாதது. அதிலும் இந்த அமைப்பைத் தீய கிரகங்கள் பார்த்தால், ஜாதகன் வேளா வேளைக்குச் சரிவர போஜனம் செய்யாதவனாகவும், நித்திரை இல்லாதவனாகவும், மன அமைதி இல்லாதவனாகவும் இருப்பான்.

அலைச்சல் இருக்கும். குடும்பத்தை அடிக்கடி இடம் மாற்றம் அல்லது ஊர் மாற்றம் செய்ய நேரிடும்.
திறமையற்றவன், சோம்பேறி என்று அவப்பெயர் கிடைக்கும் வம்புகளும், வழக்குகளும் ஏற்பட்டுப் படுத்தி எடுக்கும்

சிலர் பொது சேவைகளில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டு மன நிறைவு, மன அமைதி பெறுவார்கள்

லக்னமும் தொழில் அமைப்பும்

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



**மேஷம் லக்னமும் தொழில் அமைப்பும்**

மேஷ லக்னத்தில் பிறந்தவர்களுக்கு ஜீவன ஸ்தானாதிபதி சனி பகவானாவார். பொதுவாக, தொழில் காரகன் என வர்ணிக்கப்படக்கூடிய சனி பகவான் இந்த லக்னத்திற்கு10ம் அதிபதி என்பதால் அவர் சுக்கிரன், புதன், குரு போன்றகிரகங்களின் சேர்க்கை பெற்று பலமாக அமையப் பெற்றால், சொந்தத் தொழில் செய்து அதன் மூலம் சம்பாதிக்கக்கூடிய யோகம் உண்டாகும்.

மேஷ லக்னத்தில் பிறந்தவர்களுக்கு ஜீவனாதிபதி சனியே பாதகாதிபதியாகவும் இருப்பதால், வேலையாட்களிடமும் ஸ்பெகுலேஷன் சார்ந்த தொழில் விஷயங்களிலும் முதலீடு செய்கின்ற போது முன்னெச்சரிக்கையுடன் இருந்து நிலையான விஷயங்களில் மட்டும் முதலீடு செய்தால்,லாபங்களை அடைய முடியும். 10ம் அதிபதி சனி பலமாகஅமையப் பெற்று சுபர் பார்வையுடனிருந்தால் இரும்பு,எந்திரங்கள், வண்டி, வாகனங்களில் மூலம் அனுகூலங்கள்,பழைய பொருட்களை விற்பனை செய்யும் தொழில், கடின உடல் உழைப்பு சார்ந்த தொழில்கள் போன்றவற்றை செய்ய நேரிடும்.

சனி சுக்கிரனுடன் புதனும் இருந்தால் ஒன்றுக்கும் மேற்பட்ட தொழில் யோகம், பலரை நிர்வாகம் செய்து சொந்த தொழில் செய்யக்கூடிய யோகம் உண்டாகும்.அதுமட்டுமின்றி வணிகம், வியாபாரம், ஏஜென்ஸி கமிஷன் தொடர்புடைய தொழில்களும் ஏற்றத்தை ஏற்படுத்தும். சனி பகவானுடன் குரு சேர்க்கைப் பெற்று பலமாக இருந்தால் வெளியூர், வெளிநாட்டு தொடர்புடையவைகளாலும்,கொடுக்கல், வாங்கல், ஏஜென்ஸி கமிஷன் போன்ற வற்றாலும் சம்பாதிக்கும் வாய்ப்பு உண்டாகும். இதுமட்டுமின்றி மற்றவர்களுக்கு ஆலோசனைகள் வழங்கும் துறை, வக்கீல் பணி, நீதித்துறை, இன்சூரன்ஸ் போன்றவைகளில் சம்பாதிக்கும் வாய்ப்பு உண்டாகும்.குருபகவானுக்கு 10ம் வீடு நீச ஸ்தானம் என்பதனால் குரு வக்ரம் பெற்றிருந்தாலோ, உடன் சனி அமைந்திருந்தாலோ மட்டும்தான் கௌரவமான பணிகள் செய்யக்கூடிய வாய்ப்பு உண்டாகும். மேற்கூறியவாறு குரு அமையப் பெற்றுபுதனுடன் இணைந்திருந்தால் பள்ளிகல்லூரிகளில் ஆசிரியர், பேராசிரியர்களாக பணியுரியக்கூடிய வாய்ப்பு,மற்றவர்களுக்கு ஆலோசனைகள் வழங்குவதில் வல்லவராக

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



விளங்கக்கூடிய வாய்ப்பு, வங்கி பணி போன்றவற்றின் மூலம் சம்பாதிக்க முடியும்.

மேஷ லக்னத்திற்கு லக்னாதிபதியான செவ்வாய்க்கு 10ம் வீடு உச்ச ஸ்தானமாகும். செவ்வாய் 10ல் அமைந்து உச்சம்,திக் பலம் பெற்று இருந்தால், மிகச் சிறந்த நிர்வாகியாக விளங்கக்கூடிய அமைப்பு, போலீஸ், இராணுவம் போன்ற துறைகளில் பணிபுரியக்கூடிய வாய்ப்பு, பேருந்து, ரயில்வே துறை போன்றவற்றில் உயர் பதவிகளை வகிக்கும் அமைப்பு, அதிகாரமிக்க பதவிகளை அடையும் வாய்ப்புஉண்டாகும். செவ்வாய் சூரியன் சேர்க்கைப் பெற்றிருந்தால் அரசு, அரசு சார்ந்த துறைகளில் சம்பாதிக்கும் அமைப்பைக் கொடுக்கும். உடன் சனியும் பலம் பெற்றிருந்தால் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உயர் பதவிகள் தேடிவரும். 10ல்செவ்வாய் அல்லது சூரியன் அமையப் பெற்று உடன் சந்திரன் ராகு அல்லது கேது சேர்க்கை பெற்றால் மருத்துவத் துறையில் பணிபுரியக்கூடிய வாய்ப்புஉண்டாகும். சூரியன் செவ்வாயுடன் குரு சேர்க்கை அல்லது பார்வையிலிருந்தால் கௌரவமான உத்தியோகம் கிடைக்கும்.

சனி பகவான் ராகு அல்லது கேது சேர்க்கைப் பெற்றால் வாழ்வில் பல்வேறு வகையில் சோதனைகள், சட்ட சிக்கல்கள் நிறைந்த துறைகளில் பணிபுரியக்கூடிய வாய்ப்புஉண்டாகும். அதிலும் சுபர் பார்வையின்றி இருந்தால் மற்றவர்களை ஏமாற்றிப் பிழைக்கும் அவலநிலை உண்டாகும். சனி பகவான் பலமிழந்திருந்தால் நிலையான வேலை, நல்ல வருமானம் இல்லாமல் பல்வேறு துறைகளில் கடைநிலை ஊழியராக பணிபுரியும் நிலை,அடிமைத் தொழில் செய்யக்கூடிய சூழ்நிலை உண்டாகும்.

## மேஷலக்னத்தில் கிரகம் நின்ற பலன்

சூரியன்:- உடல் உஷ்ணம். லக்ன பாவத்தில் சூரியன் இருப்பின் ஏற்படும் பலன் தலைமயிர் குறைந்திருத்தல், தொழில் தேக்கம், சினம், கொடூர குணம், ஏளனம் செய்தல், எனினும் சிலருக்கு விருப்பமானவர், கொடூரமான பார்வை, கடின உடல் வாகு, வீரம் நிறைந்தவர், பொறுமையற்றவர், தயவின்மை கொண்டவர்.

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



சந்திரன்:- லக்ன பாவத்தில் சந்திரன் இருப்பின் ஏற்படும் பலன்:அழகா இருப்பார்கள்.குளிர்ச்சியான தேகம் கடகம், மேஷம், ரிஷபம் இவை லக்னமாக இருந்தால் பிற மனிதரின் மனதை அறியும் தன்மை உள்ளவர், அழகு, செல்வம் அனுபவிக்கும் குணம் இருக்கும், தேய்பிறை சந்திரனாக இருந்தால் முற்கூறிய பலன்கள் குறைவுபடும். மற்ற ராசிகள் லக்னமாக வந்தால் அதில் சந்திரன் இருப்பின் பித்தனாகவோ, நீசனாகவோ, உடலில் குறையுள்ளவர்களாகவோ, தகுதியற்ற பேச்சுடையவராகவோ இருப்பார். தேய்பிறை சந்திரனாக இருந்தாலும் வலுகுன்றிய நிலையில் இருந்தாலும் மேற்கூறிய பலன்கள் கண்டிப்பாக நடைபெறும்.

செவ்வாய்:;- லக்ன பாவத்தில் செவ்வாய் இருப்பின் ஏற்படும் பலன்: சிவந்த தேகமுடையவர். கொடூர தன்மை உடையவன், எவரும் செய்ய முடியாத செயல்களை செய்தல், இரக்கமின்மை, செல்வம், வீரம், பற்றும் பாசமும் உடையவர். மிடுக்கான உடலமைப்பு, உடலில் தழும்பு உள்ளவர், சபலப்படுபவர்.

புதன்: லக்ன பாவத்தில் புதன் இருப்பின் ஏற்படும் பலன்: எப்பொழுதும் கேடில்லாத உடல், வலிமையுடன் இருத்தல், அறிவும், ஆற்றலும், காலத்தை உணர்த்துதல், பொதுவிஷயங்கள் பற்றிய தெளிவு, குலத்தின் ஒழுக்கம், ஞான சிந்தனை, காவியம், சோதிடம் மற்றும் கணித அறிவுகளை தெரிந்து கொள்பவர்.

குரு:- லக்ன பாவத்தில் குரு இருப்பின் ஏற்படும் பலன்:அமைதியானவர். ஆன்மிகவாதி அழகான கட்டுடல், கூடுதல் வலிமை, முழு ஆயுள், நன்கு ஆராய்ந்து செயல்களை செய்பவர், ஆற்றலும், கல்வியும், திறமையும், அறிவும், வீரமும் உடையவர், மதிக்க தகுந்தவர்.

சுக்கிரன்:- லக்ன பாவத்தில் சுக்கிரன் இருப்பின் ஏற்படும் பலன்: அழகுள்ள கண்கள், முகம் மற்றும் அழகான உடலமைப்பு உடையவர், இன்பம், முழு ஆயுள், வீரமின்மை உள்ளவர், பார்ப்பவர்களின் கண்களுக்கு அமிர்தமழை பொழிபவராவர், கவர்ச்சி உடையவர்.

சனி:- லக்ன பாவத்தில் சனி இருப்பின் ஏற்படும் பலன்: சோம்பலாக இருப்பார்கள். மந்த புத்தி உடையவர். துலாம், மகரம், கும்பம், ஆகியவற்றில் லக்னமாகி அதில் சனி இருந்தால் அரசருக்கு இணையாக இருத்தல் அல்லது நாடு, நகரங்களுக்கு முக்கியமானவராகவும் உயர்ந்த பதவியிலும் இருப்பார். மற்ற ராசிகள் லக்னமாக இருந்து அதில் சனி இருந்தால் இளமையில் நோய், ஏழ்மை, துக்கம், சிற்றின்ப தாக்கம், தூய்மையின்மை, சோம்பல், தனுசு, மீனம் லக்னமானால் சில நற்பலன்கள் நடைபெறும்.

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



**ராகு::- லக்ன பாவத்தில் ராகு இருப்பின் ஏற்படும் பலன்: யார் பேச்சையும் கேட்க மாட்டார்கள்..மூர்க்க குணம் நீண்ட ஆயுள், வலிமை, தலை, முகம் போன்ற இடங்களில் நோய் உள்ளவர்.**

**கேது:- லக்ன பாவத்தில் கேது இருப்பின் ஏற்படும் பலன்: ஆன்மீகத்தில் ஈடுபாடு நன்றி மறப்பவர், இன்பம் இல்லாதவர். புறம் கூறுபவர். பிறரை இருக்கும் நிலையிலிருந்து கீழே தள்ளுபவர். உடலில் ஊனமும், வஞ்சகர் நட்பும் உடையவர்.**

**கோசார செவ்வாயின் பலனகள்**

**1) ஒரு ஜாதகனின் சந்தர லக்கினத்தில் செவ்வாய் சஞ்சரிக்கும்போது;**

**ஜாதகனுக்கு எல்லா வகைகளிலும் தொல்லைகள் உண்டாகும்.**

---

**2) சந்திர லக்கினத்தில் இரண்டாம் இடத்தில் செவ்வாய் சஞ்சரிக்கும்போது;**

**ஜாதகன் எவ்வளவுதான் ஆற்றலும் செல்வாக்கும் படைத்தவனாய் இருந்தாலும்.அவனுக்கு அரசாங்கத்தின் மூலமும் பகைவர்கள் மூலமும் கெடுதல்கள் ஏற்படும். சண்டை சச்சரவுகள். பித்தநோய்கள்.திருடர்கள்.நெருப்பு இவற்றால் தீங்குகள் தோன்றும்.**

---

**3) சந்திர லக்கினத்துக்கு மூன்றாம் இடத்தில் செவ்வாய் சஞ்சரிக்கும்போது;**

**ஜாதகனுக்குத் திருடர்களாலும் சிறுவர்களாலும் நன்மை**

**உண்டாகும்.அவனது செல்வம் பெருகும்.உடல் நிலை சீர்படும். மற்றவர்களை அடக்கி ஆளக்கூடிய அதிகாரமும் நிலபுலன்களின் சேர்க்கையும் ஏற்படும்.**

---

**4) சந்திர லக்கினத்துக்கு நான்காம் இடத்தில் செவ்வாய் சஞ்சரிக்கும்போது;**

**ஜாதகனுக்குக் காய்ச்சலோ வயிற்று வலியோ ஏற்படுகிறது.**

**அவன் விரும்பாமலே அவனுக்குத் தீயவர்களுடைய தொடர்பும்,அதனால் தீமைகளும்**

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



உண்டாகும்.அவனுக்கு எதிலும் குறைவை உண்டாக்கும்படியான நிகழ்ச்சிகள் நடக்கும்.

---

5) சந்திர லக்கினத்திக்கு ஐந்தாம் இடத்தில் செவ்வாய் சஞ்சரிக்கும்போது;

ஜாதகனுடைய பிள்ளைகளாலேயே அவனுக்குத் தொல்லைகள் உண்டாகும். பகைவர்களால் இடைஞ்சல் ஏற்படும். கோபமும் பயமும் அடிக்கடி தோன்றும். நோய்களால் உடல் அழகு குன்றும்.

---

6) சந்திர லக்கினத்துக்கு ஆறாம் இடத்தில் செவ்வாய் சஞ்சரிக்கும்போது;

ஜாதகனுக்கு இருந்த பயங்களும் பகைமைகளும் விலகிவிடும்.சண்டைகள் சமாதானம் ஆகிவிடும். ஏராளமான செல்வம் உண்டாகும்.ஜாதகன் எவருடைய தயவையும் எதிர்பாராதவனாய் இருப்பான்.

---

7) சந்திர லக்கினத்துக்கு ஏழாம் இடத்தில் செவ்வாய் சஞ்சரிக்கும்போது;

ஜாதகனுக்கு அவனுடைய மனைவியோடு சண்டை ஏற்படும். கண் நோயும் வயிற்று வலியும் உண்டாகும்.

---

8) சந்திர லக்கினத்துக்கு எட்டாம் இடத்தில் செவ்வாய் சஞ்சரிக்கும்போது;

ஜாதகனுக்கு இரத்தப் போக்கு ஏற்படும். அவனுடைய பணத்துக்கும் கௌரவத்துக்கும் பழுது உண்டாகும்.

---

9) சந்திர லக்கினத்துக்கு ஒன்பதாம் இடத்தில் செவ்வாய் சஞ்சரிக்கும்போது;

ஜாதகனுக்கு உடல் வலிமை குன்றும். பொருள் விரயமும் அலைச்சலும் அவமானமும் ஏற்படும். அவன் நடமாடுவதற்கும்கூட வலுவில்லாதவனாய்த் திரிவான்.

---

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



**10) சந்திர லக்கினத்துக்கு பத்தாம் இடத்தில் செவ்வாய் சஞ்சரிக்கும்போது;**

ஜாதகனுக்குப் பெரிய நன்மையோ தீமையோ ஏற்படமாட்டாது எனினும் பாதி காலம் (முற்பகுதி அதாவது) சிறிது தொல்லைகளும். பாதி காலம் (அதாவது பிற்பகுதி) சிறிது நன்மைகளும் ஏற்படும்.

---

11) சந்திர லக்கினத்துக்குப் பதினோராம் இடத்தில் செவ்வாய் சஞ்சரிக்கும்போது;

ஜாதகனுக்குத் தொட்டது எல்லாம் வெற்றியாகவே முடியும். ஏராளமான பொருள் வரவு ஏற்படும். அவன் தன்னைச் சூழ்ந்து உள்ள எல்லாரையும் காட்டிலும் மிக மேலான நிலையில் இருப்பான்.

---

12) சந்திர லக்கினத்துக்குப் பன்னிரண்டாம் இடத்தில் செவ்வாய் சஞ்சரிக்கும்போது;

ஜாதகனுக்குச் சொல்லமுடியாத தொல்லைகள் ஏற்படும்.பல வழிகளில் வீண் செலவுகள் நெரும். கண் வலியியினாலும்.பித்தநோயினாலும்.பெண்களுடைய கோபத்தினாலும் ஜாதகன் துன்பத்தை அடைவான்.

மருத்துவ ஜோதிடம்

பாவங்கள் குறிப்பிடும் உடற்பாகங்கள் மற்றும் நோய்

லக்ன பாவம்:

ஒருவரது உயரம், தோற்றம், பருமன் இவற்றைக் குறிப்பதாகும். சிறப்பாக,தலை, மூளை, ரோமம், தோலைக்குறிக்கும். நிறத்தின் தன்யைக் குறிக்கும்.லக்னத்தில் இருக்கும் கிரகம், பார்க்கும் கிரகத்திற்கேற்ப அவரது நிறம்அமையும்.

ஆயுள் – நோய் எதிர்ப்புச் சக்தி – அல்லது இறுதி வரை ஏதாவது ஒருவியாதியால்

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



துன்பப்படும் நிலை சக்தி – நோய் தாங்கும் சக்தி உடல் உறுதிவியாதியிலிருந்து விடுபடும் நிலை – நோய் குணமாகும் நிலை.

2ம் பாவம்:

முகம், கண்கள், பற்கள், தொண்டை, மூக்கு, குரலின் தன்மை இவற்றைக்குறிக்கும்.

இளமைக் காலத்தில் ஏற்படும் நோய்கள். அவற்றால் ஏற்படும் பாதிப்பு

3ம் பாவம்:

காதுகள், கழுத்து, தோள்பட்டை, கைகள், மூச்சுக் குழுய், அதில் ஏற்படும்அழற்சி, குரல் வளை, குரல் வளை அழற்றி.

நோய் எதிர்ப்பு சக்தி பெறும் தகுதி – நோயைத் தாங்கும் தைரியம், உடலில்ஏற்படும் சக்தி இரத்தத்தின் தன்மை, முதலியன

4ம் பாவம்:

மார்பகம், நுரையீரல், உணவுக் குழாய்.

குடும்பத்தில் வரும் பரம்பரை நோய், உணர்ச்சி வசப்படுவதால் ஏற்படும்நோய் மன வருத்தத்தால் ஏற்படும் பாதிப்பு

5ம் பாவம்:

இருதயம், ஈரல், மண்ணீரல், கணையம், சிறுகுடல் பகுதி, பித்தப்பை.

பெண்களுக்கு கர்ப்ப காலத்தில் ஏற்படும் பாதிப்பு, உணர்ச்சிகளால் ஏற்படும்பாதிப்பு

6ம் பாவம்:

கிட்னி, குடல் பகுதி.

வியாதிகளைக் குறிப்பிடும் இடம். விபத்துக்களால் ஏற்படும் பாதிப்பு,அதனால் ஏற்படும் காயம், துன்பம் முதலியன

7ம் பாவம்:

கர்ப்பப் பை, கர்ப்ப பைக்குச் செல்லும் குழாய் (ஃபெலோபியன் டியூப்), கருமுட்டை மலக்குடல், அடி வயிறு.

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



**உடல் உறவால் ஏற்படும் வியாதிகள்.**

**8ம்** பாவம்:

**வெளிப்புற ஜெனன உறுப்புக்கள், ஆசனவாய் (மலத்துவாரம்).**

**தீராத வியாதிகள் கண்டு பிடிக்க இயலாத வியாதிகள். அவற்றால் ஏற்படும்துன்பம், இழப்பு**

**9ம்** பாவம்:

**இடுப்பு, தொடைப்பகுதி.**

**இறையருளால் பெறும் உடல் நலம்.**

**10ம்** பாவம்:

**முழங்கால் மூட்டுப்பகுதி.**

**உடலின் சக்தி, செயல் திறன், செயலாற்றும் தகுதிக்கானச் சக்தி பெறும்நிலை**

**11ம்** பாவம்:

**கால், கண்.**

**வியாதிகளிலிருந்து விடுபடும் நிலை. நோய் குணமாகுமா? என்பதையும்தெரிவிக்கும் பாவம்**

**12ம்** பாவம்:

**பாதம், கண்.**

**மருத்துவ மனையில் இருக்கும் நிலை. குடும்பத்தை விட்டு தனித்திருக்கும்நிலை தொற்று நோய் பாதிப்பால் தனி விடுதியில், மருத்துவ மனையில்தனிப்பகுதியில் இருக்கும் நிலை**

**ஆறாமிடம்**

**ஒருவரது ஜாதகத்தில் லக்னத்திற்கு ஆறாமிடம் ரோக ஸ்தானம் எனப்படும். இந்த ஆறாமிடம் மூலம் குறிப்பிட்ட ஜாதகர் எத்தகைய நோய்களுக்கு ஆட்படுவார் என்பதை**

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



அறியலாம். ஆறாமிடத்தில் அமர்ந்துள்ள கிரகங்கள் மூலமும், ஆறாமிடத்தை பார்வை செய்யும் கிரகங்கள் மூலமும், அந்த ஜாதகர் எத்தகைய நோய்களுக்கு ஆட்படுவார் என்பதையும் அறிய இயலும். இந்த நோய்களின் தாக்குதல் எப்போது பலமாக தன் இயல்பைக் காட்டும், எந்த காலக் கட்டங்களில் கட்டுப்பாட்டில் இருக்கும் என்பதையும் அறியலாம்.

சூரியன்: மலச்சிக்கல், அஜீரணம், தூக்கமின்மை, கண் நோய்கள், ரத்த அழுத்தம், இதய நோய், ஆஸ்துமா, வயிற்றில் பூச்சிகள் போன்ற நோய் களையும் ஜூரம் போன்றவை.

சந்திரன்: மனநோய்கள், உணர்ச்சி வசப்படுதல், அதிவேக இதயத் துடிப்பு, ரத்த அழுத்தம், காச நோய், ரத்த சோகை, சளி, கபம், பாலியல் நோய்கள் இரைப்பைப் புண், நீரிழிவு, குடல் புண் போன்றவை.

செவ்வாய்: மூலநோய், நீரிழிவு, இரைப்பை மற்றும் குடல் நோய்கள், மன அழுத்தம், தோல் வியாதிகள், இதய நோய், நரம்புத் தளர்ச்சி, அம்மை, விபத்து மற்றும் ஆயுதங்களால் பாதிப்புகள்.

புதன்: இதய நோய்கள், ரத்த அழுத்தம், வயிற்றுப்புண், புற்றுநோய், தோல் நோய்கள், நரம்பு தளர்ச்சி, இரைப்பை புண் போன்றவை.

குரு: தொண்டை சம்பந்தமான நோய்கள், தைராய்டு, அம்மை, முடக்கு வாதம், காமாலை, நரம்பு சம்பந்தப்பட்ட வியாதிகள், பக்க வாதம், கீழ் வாதம், நீரிழிவு போன்றவை.

சுக்கிரன்: கண், காது, மூக்கு நோய்கள். நுரையீரல் நோய், இருமல், குடல்புண், இருதய நோய், ரத்த அழுத்தம், பாலியல் தொடர்பு வியாதிகள் போன்றவை.

சனி: மனநோய், கை கால் வலிப்பு, மூளை பாதிப்பு, தோல் நோய், நீண்ட கால வியாதிகள், சிறுநீரக நோய், பித்தம், குடல் நோய், விபத்தால் பாதிப்பு போன்றவை.

ராகு: அதிக அமிலம் சுரத்தல், வயிறு கோளாறுகள், அஜீரணம், தூக்கமின்மை, மூளை நோய், குடல் புண், தோல் வியாதிகள் போன்றவை

கேது: புற்றுநோய், வாதம், தோல் நோய்கள், காலரா, நரம்புத் தளர்ச்சி, சிறுநீரகக் கோளாறு போன்றவை.

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



ஜென்ம நட்சத்திர தோஷமும் பரிகாரங்களும்

அஸ்வினி:

முதற்பாகத்தில் பிறந்த குழந்தையின் தந்தைக்கு மூன்று மாதங்களுக்கு இன்னல்களும், பொருள் நஷ்டமும் உண்டாகும். அதற்கு சொர்ண தானமளிக்க வேண்டும். மற்ற மூன்று பாதங்களில் பிறந்தால் சிறிதளவு தோஷமுண்டு. இதற்கு வஸ்திர தானம் செய்திடல் வேண்டும். இந்த நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் கூத்தனூரில் எழுந்தருளியுள்ள கலைவாணியை வழிபட்டு வந்தால் எல்லா சிறப்புகளையும் பெறலாம்.

பரணி:

முதல் பாதம் தோஷமில்லை. இரண்டாவது பாதத்தில் பிறந்தால் தோஷமுண்டு. மூன்றாவது பாதம் மிகுந்த துன்பத்தை தரும். 4வது பாதம் முதல் 8 நாழிகைக்குள் பிறந்தால் தாயாரின் உடல்நிலை பாதிப்புக்குள்ளாகும். இதற்கு சாந்தியாகத் துர்க்கை அல்லது காளிக்கு அபிஷேக ஆராதனைகள் செய்ய வேண்டும். பொன் அல்லது எருமை தானமளிக்கலாம். இந்த நட்சத்திரத்தில் பிறந்தோர் பட்டீஸ்வரம் சென்று துர்க்கையை வழிபட்டால் வளம் பெருகும்.

கிருத்திகை:

முதலிரண்டு பாதங்கள் தோஷமில்லை. மற்ற இரண்டு பாதங்களில் பிறந்தால் பெற்றோர்களுக்கு இன்னல்களும் இடையூறுகளும் உண்டாகும். ஆடு தானம் சிறந்தது. சூரிய ஆராதனையும், திருவண்ணாமலையில் உள்ள அக்னி லிங்க வழிபாடுகளும் மன அமைதியையும், பொருள் வளமையையும் நல்கும்.

நட்சத்திரக்காரர்கள் வழிபட வேண்டிய சிவரூபங்கள்!...

★ அசுவனி → கேது → கோமாதாவுடன் கூடிய சிவன்.

★ பரணி → சுக்கிரன் → சக்தியுடன் கூடிய சிவன்.

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



★ கார்த்திகை → சூரியன் → சிவன் தனியாக.

# செவ்வாய் தோஷம்

லக்னத்திற்கு 2ம் இடம் குடும்பம்

லக்னத்திற்கு 4ம் இடம் தாய்

லக்னத்திற்கு 7ம் இடம் கணவர் (அ) மனைவி

லக்னத்திற்கு 8ம் இடம் மாங்கல்யம்

லக்னத்திற்கு 12ம் இடம் அயன்சயன யோகம் (தூக்கம் சாப்பாடும்)

2ல் செவ்வாய்: குடும்ப பற்று இல்லாமல் இருப்பர். இவரின் பேச்சும் எடுபடாது

4ல் செவ்வாய்: தாய்க்கு பலன் குறைவு. தாய்க்கு தோஷம் காட்டும்.

7ல் செவ்வாய்: மனைவிக்கு தோஷம்.

8ல் செவ்வாய்: ஆயுள் தோஷம் காட்டும். எதிர்பாராத விபத்து ஏற்படும்.

12ல் செவ்வாய்: தூக்கமின்மை, கணவன் மனைவி இல்லற பாதிப்பு



செவ்வாய் தோஷ விதிவிலக்குகள்

1. செவ்வாய் மேஷம் அல்லது விருச்சிகத்தில் ஆட்சி பெற்றிருந்தால் தோஷமில்லை.

2. செவ்வாய் மகரத்தில் உச்சம் பெற்றிருந்தால் தோஷமில்லை.

3. செவ்வாய் கடகத்தில் நீசமாக இருந்தால் கூட தோஷமில்லை.

4. சிம்ம லக்னத்தில் பிறந்தவர்களுக்கும், கடக லக்னத்தில் பிறந்தவர்களுக்கும் செவ்வாய் எங்கிருந்தாலும் தோஷமில்லை.

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



5. ரிஷிப லக்னத்தில் பிறந்தவர்களுக்கு 2ம் இடத்தில் செவ்வாய் இருந்தால் தோஷமில்லை.

6. மிதுனம் அல்லது கன்னி ஆகிய வீடுகள் லக்னத்திற்கு 2ம் இடமாக வந்து, அங்கு செவ்வாய் இருந்தாலும் தோஷமில்லை.

7. செவ்வாய் இருக்கும் 4ம் வீடு மேஷம் அல்லது விருச்சிகமாக இருந்தால் தோஷமில்லை.

8. செவ்வாய் இருக்கும் 7ம் வீடு கடகம் அல்லது விருச்சிகமாக இருந்தால் தோஷமில்லை.

9. செவ்வாய் இருக்கும் 8ம் இடம் தனுசு அல்லது மீனமாகில் தோஷமில்லை.

10. செவ்வாய் இருக்கும் 12ம் இடம் ரிஷபம் அல்லது துலாமாகில் தோஷமில்லை.

11. செவ்வாய் இருக்கும் 2ம் இடம் புதன் வீடாக அமைந்தால் தோஷமில்லை.

12. செவ்வாய் இருக்கும் 4ம் வீடு செவ்வாய் வீடாக அமைந்தால் தோஷமில்லை.

13. செவ்வாய் இருக்கும் 7ம் வீடு சந்திரன் வீடாக அமைந்தால் தோஷமில்லை. அல்லது செவ்வாய் உச்சம் பெறும் வீடாக இருந்தாலும் தோஷமில்லை.

14. செவ்வாய் இருக்கும் 8ம் வீடு குரு வீடாக அமைந்தாலும் தோஷமில்லை.

15. செவ்வாய் இருக்கும் 12ம் வீடு சுக்கிரனின் வீடாக அமைந்தாலும் தோஷமில்லை.

16. செவ்வாய் குருவுடன் சேர்ந்தால் தோஷமில்லை. அல்லது குருவால் பார்க்கப்பட்டாலும் தோஷமில்லை.

17. செவ்வாய் சந்திரனுடன் சேர்ந்தாலும் தோஷமில்லை. பார்க்கப்பட்டாலும் தோஷமில்லை.

18. செவ்வாய் புதனுடன் சேர்ந்தாலும் அல்லது புதனால் பார்க்கப்பட்டாலும் தோஷமில்லை.

19. செவ்வாய் சூரியனுடன் சேர்ந்திருந்தாலும் அல்லது சூரியனால் பார்க்கப்பட்டாலும் தோஷமில்லை.

20. செவ்வாய் சனியுடன் கூடினாலும் அல்லது பார்க்கப்பட்டாலும் தோஷமில்லை.

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



21. செவ்வாய் ராகு கேதுவோடு கூடினாலும் அல்லது பார்க்கப்பட்டாலும் தோஷமில்லை.

22. செவ்வாய் எந்த வீட்டில் இருக்கிறதோ, அந்த வீட்டின் அதிபதி லக்னத்திற்கு 1,4,5,7,9,10 ஆகிய இடங்களில் இருந்தாலும் தோஷமில்லை.

23. செவ்வாய் தன் நட்பு கிரகங்களான சூரியன், சந்திரன், குரு ஆகியோரின் வீடுகளான சிம்மம், கடகம், தனுசு, மீனம் ஆகியவற்றில் இருந்தாலும் தோஷமில்லை.

கும்பத்தில் செவ்வாய் இருந்தால் மட்டும் செவ்வாய் தோஷம

## மேஷ லக்னமும் முன் கர்மாவும்

ஒருவருக்கு மூன்றுவிதமான கர்மாக்கள் உள்ளன.

(1) முன் கர்மா (2) நடப்பு கர்மா (3) வரும் கர்மா

முன் கர்மாவில் இரண்டு வித கர்மாக்கள் உள்ளன

(1) தீய முன்கர்மா (2) நற்முன்கர்மா

தீய முன்கர்மாவானது கடுமையான சோதனைகளைத் தரும். வேதனையின் சுய தன்மையினை தீய முன்கர்மா தெசையின்போது தெரிந்து கொள்ளலாம்.

ஒருவருக்கு நற் முன்கர்மா கிரமானது வலிமையாக இருந்தால் தீய முன் கர்மாவின் தீய பலன்களை குறைத்துவிட முடிகிறது.

ஒருவருடைய பிறந்த ஜாதகத்தில் முன் கர்மா கிரகம் யார் என்று அறிந்து கொண்டால் கர்மாவினை அகற்றுவதற்கான பரிகாரத்தினை எளிதாக செய்யலாம். ஒருவர் தம்முடைய கர்மாவினை அறிந்து கொள்ளாமல் இருந்தால் வரவேண்டிய பலன்கள் தாமதப்பட்டுக் கொண்டிருக்கும் அல்லது வராமலேயே போய்விடும். முன் கர்மாவினை அடையாளம் காட்டும் சுப முன் கர்மா கிரகம் வலுத்திருந்தால் அவர்களுக்கு இயற்கையாகவே முன்கர்மா கிரக பரிகார தெய்வத்தினை தரிசிக்கும் பாக்கியம் கிடைத்திருக்கும்.

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



## நம்மோடு விளையாடும் கர்மா ?

ஒருவரின் ஜாதகத்தில் கிரகங்கள் கர்மாவிற்கு கட்டுப்பட்டே தங்களது பலன்களின் பங்களிப்பினை வெளிப் படுத்துகிறது. கர்மா என்றால் முன் கர்மா மட்டுமே நினைவிற்கு வரும். ஆனால் ஒருவருடைய வாழ்வில் 12 விதமான கர்மாக்கள் அவர்களோடு பிணைந்திருப்பதை எவரும் அறிந்திருக்க வாய்ப்பில்லை.

| | |
|---|---|
| நடப்பு கர்மாவினை அடையாளம் காட்டும் வீடுகள் | 1 4 7 10 |
| முன் கர்மாவினை அடையாளம் காட்டும் வீடுகள் | 2 5 8 11 |
| வரும் கர்மாவினை அடையாளம் காட்டும் வீடுகள் | 3 6 9 12 |

ஒருவருடைய ஜாதகத்தில் கிரகங்கள் 1 4 7 மற்றும் 10ல் அமர்ந்து தெசை நடந்தால் அவர்கள் அந்த கால கட்டத்தில் நடப்பு கர்மாவினை அனுபவிப்பதற்கான அறிகுறிகள் தெளிவாக தெரியும்.

ஒருவருடைய ஜாதகத்தில் கிரகங்கள் 2 5 8 மற்றும் 11ல் அமர்ந்து தெசை நடந்தால் அவர்கள் அந்த கால கட்டத்தில் முன் கர்மாவினை அனுபவிப்பதற்கான அறிகுறிகள் தெளிவாக தெரியும்.

ஒருவருடைய ஜாதகத்தில் கிரகங்கள் 3 6 9 மற்றும் 12ல் அமர்ந்து தெசை நடந்தால் அவர்கள் அந்த கால கட்டத்தில் வரும் கர்மாவினை அனுபவிப்பதற்கான அறிகுறிகள் தெளிவாக தெரியும்.

கர்மாக்களிலிருந்து யாருமே தப்ப முடியாது. எல்லோருமே எதாவது ஒரு கர்மாவின் பிடியில் சிக்குண்டு கர்மா தரும் நற்பலன்கள் அல்லது தீய பலன்களை இதனில் ஏதாவது ஒன்றினை அனுபவித்தே தீர வேண்டும்.

ஒருவர் பிறந்த லக்னத்திலிருந்து 1ம் வீட்டிலிருந்து 6ம் வீடுகள் வரையில் நற்பலன்களை தரும் கர்மா வீடுகளாகும்.

ஒருவர் பிறந்த லக்னத்திலிருந்து 7ம் வீடு முதல் 12ம் வீடு வரையில் தீயப்பலன்களை தரும் கர்மா வீடுகளாகும்.

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



**மேஷ லக்னத்திற்கு முன் கர்மா கிரகம்**

முன் கர்மாவின் தீய முன்கர்மா கிரகம் சனி

முன் கர்மாவின் நற் முன்கர்மா கிரகம் சூரியன்

மேஷ லக்னத்தில் பிறந்தவர்களுக்கு சனி பகவான் முன் கர்மாவின் தீய பலன்கள் அடையாளம் காட்டும் கிரகமாகிறது. இவர்களுக்கு சனி தெசை நடந்தால் கர்மா தெசையாக கணக்கில் வரும். சனி தெசை முழுவதும் இவர்கள் முன் கர்மாவினை அனுபவிக்க நேரிடும். சுப முன் கர்மா கிரகமானது வலிமையாக இருந்தால் தீய முன் கர்மா வலுத்த கெடுதல்களை செய்யாது.

மேஷ லக்னத்திற்கு கடும் பிரச்னைகளை கொடுக்கும் சனி பகவான் வலிமையான இடத்தில் இருந்தால் பலம் பெற்றும் தீய பலன்களை அதிகம் கொடுக்கும். வலிமையிழந்து இருக்கும் சனி பகவானால் தீய பலன்கள் அதிகம் இருக்காது.

மேஷ லக்னத்தில் பிறந்தவர்களுக்கு சனி பகவான் எந்த பாவத்தில் நின்றிருக்கிறாரோ அந்த பாவம் மற்றும் சனி பார்வையிடும் பாவம் மற்றும் சனியின் பார்வையில் இருக்கும் கிரகம் தொடர்பான முன் கர்மா தோஷம் இருக்கும்.

பூசம் அனுசம் உத்திரட்டாதி நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்கு சனியின் ஆதிக்கம் அதிகமிருக்கும். அவர்கள் மேஷ லக்னத்தில் பிறந்திருந்தால் சனி தெசையானது முன்கர்மா தெசையினை ஆரம்பமாக இருக்கும். இவர்கள் குழந்தையின் பருவத்திலேயே முன் கர்மாவினை அனுபவிக்க நேரிடும்.

புனர்பூசம் விசாகம் பூரட்டாதி ஆகிய நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்கு மேஷ லக்னத்தில் பிறப்பெனில் சனி தெசையானது மத்திம வயதில் வந்து தொல்லைகளை தரும்.

திருவாதிரை சுவாதி சதயம் நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் ஜனன லக்னம் மேஷமெனில் இவர்களுக்கு மத்திம வயதினை கடந்த நிலையில் வந்து அதிக உபத்ரவம் கொடுக்கும்.

மேஷ லக்னத்தில் பிறந்தவர்களுக்கு சூரியன் பலம் நிறைந்த நிலையில் இருக்கும் நிலையில் இருந்தால் சிறப்பான பரிகார நிவர்த்தி பலம் கிடைக்கும். சூரியன் பலமிழந்த நிலையில் இருந்தால் சனி பகவானுக்கு கொண்டாட்டமாக மாறிவிடும்.எனவே தீய முன்கர்மாவின் பலத்தினை அறிந்து கொண்டு அதற்கு தகுந்தாற்போல் பரிகாரத்தனை செய்து வருவதால் தீய பலன்கள குறைந்து நற் பலன்களின் காற்றினை சுவாசிக்கலாம்.

# மேஷ லக்னம் மற்றும் மேஷ ராசி காரகத்துவம்



சனி பகவானுக்கு எள் எண்ணெய் ஏற்றி உரிய பரிகாரம் செய்து வரவேண்டும். தினம் காகத்திற்கு அன்னம் வைத்து வரவேண்டும். முடவர்களுக்கு உதவிகள் செய்து வரவேண்டும். திருநள்ளாறு ஆண்டுக்கொரு முறை சென்று வர வேண்டும்.

ஸ்ரீ ஆஞ்சநேயரை வழிபட்டு வருவதால் தீய பலன்கள் குறைகிறது

சிறப்பான பரிகாரம் அன்னை மாகாளி நின்ற கோலத்தில் சூலம் கீழ் நோக்கியுள்ள அமைப்பில் உள்ள தெய்வத்தினை மனமுருகி வேண்டி கர்மா விலக கோரிக்கை வைத்தால் பலன் நிச்சயம்.

குறிப்பிட்ட பரிகார கோவில்

நாகப்பட்டினம் திருவாரூர் மார்க்கத்தில் கீவளூர் என்ற ஊரிலுள்ள சிவன் கோவிலில் இருக்கும் அஞ்சுவட்டத்தம்மன் பரிகார தெய்வமாகும். வேண்டி விரும்பி கேட்பதால் தீய கர்மாவானது விலகி ஓடும். நற் பலன்கள் தேடி வரும்


## ஜோதிடச் சேவையில்

ஆன்மீக ஜோதிடர், ஜோதிட பூஷன், பிரசன்ன பேரொளி,

தாந்ரீக சுடரொளி திரு L.ரமேஷ்.M.com.,M.phil, B.Ed.,

அலைபேசி:9791432947,8508077805,

மின்னஞ்சல் : aanmigajothidarnlramesh2012@gmail.com

Website : http://sriammanjothi.blogspot.com


வாழ்க வளர்க

ஜாதகம் பார்க்கப்படும் :

